# லைப்பாய்
## பழக்கத்தையும் அவன் அறிந்திருக்கிறான்



அவன் ஸ்கூலுக்குப் போகிறான். அங்கிருந்து என்ன கொண்டு வருவான்? புதிய அறிவு, புதிய முறைகள் — சில தொத்து வியாதிக் கிருமிகளுங்கூட! அவனுக்குக் கற்றுக் கொடுத்த எல்லாப் பாதுகாப்புகளுடனும் தாயார் தன் மகனை அனுப்புகிறாள். ஆரோக்கியமுள்ள சிறுவனையும் பீடிக்கக் கூடிய அழுக்கு அபாயத்திலிருந்து காப்பாற்ற லைப்பாய் சோப்பைத் தினசரி உபயோகிப்பதே அவற்றுள் முக்கியமானது.




**லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது.**

**அது ஒரு நல்ல பழக்கம்.**

L. 70-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED

ஜப்பானிய ஆட்சியின் கீழ்
பர்மாவில் என்ன நடந்தது?

மாடர்ன் தியேட்டர்ஸாரின்
மகத்தான சிருஷ்டி!

# பர்மா ராணி

என்ற படத்தைப் பார்த்துத்
தெரிந்து கொள்ளுங்கள்!



ஹொன்னப்ப பாகவதர்
கே. எல். வி. வஸந்தா
என். எஸ். கிருஷ்ணன்
- டி. ஏ. மதுரம் -
காளி என். ரத்னம்
வி. டி. ராஜகாந்தம்
முதலியோர் நடிப்பது



டைரக்ஷன்:
டி. ஆர். சுந்தரம், B.A., B.Sc., (Leeds)

**7-7-45** சனிக்கிழமை முதல்
மகத்தான ஆரம்பம்

சென்னை **பிரபாத்தில்**

கட்டணம், காட்சிகள், மாட்டினி யாவும்
வழக்கம்போல்

---



## ஏரல் குலேகட்டி வியாதிகள் குணப்படுத்த முடியும்

ஏரல் குலேகட்டி வியாதிகளைக் கண்டு பயப்படக் கூடிய காலம் போய்விட்டது. வியாதி மிகவும் முற்றிவிட்டாலொழிய ஓர் அரிய உயிரைக் காப்பாற்ற முடியும்.

கீழ்கண்ட அறிகுறிகள் சந்தேகிக்க கூடியவை



அடிக்கடி ஜுரம் ஏற்படுதல், மலச்சிக்கல், அதிக மலப்போக்கு, வாந்தி, பசியின்மை, வயிறு பொருமல், சோர்ந்து இருத்தல், அடிக்கடி சிறு சிறுத்தல்.

ஆரம்பத்திலேயே ஜாக்கிரதை
வேண்டும்

அசட்டை செய்தோ, சரியான சிகிச்சைத் தவறினாலோ ஆபத்தாய் முடியும்.

ஜம்மியின்
# லிவர்க்யூர்
உபயோகியுங்கள்

குழந்தைகளின் ஏரல் குலேக்கட்டிக்கு ஜம்மியின் லிவர்க்யூர் உபயோகியுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படுகின்றன

ஜம்மி வெங்கிட்டரமணய்யா & ஸன்ஸ்
மைலாப்பூர் — மதராஸ்.

கிளைகள்:— பம்பாய், கல்கத்தா, டில்லி,
திருச்சிராப்பள்ளி, பெங்களூர், கும்பகோணம்.



# கல்கி பொருளடக்கம்




மலர் 4 | இதழ் 48 — 1945 ஜூலை 8 — பார்த்திப ஆனி 25




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

நீண்ட கால சிறை வாழ்க்கையிலிருந்து வெளி வந்திருக்கும் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ காமராஜ் நாடார் அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்.

இம்மா முடிவுவரையில் காத்திராமல் அவரை விடுதலை செய்த சென்னை அட்வைசர் சர்க்காரையும் பாராட்டுகிறோம்.

ஆரம்பத்திலிருந்து மாசு மறுவற்ற தேச ஊழியம் செய்து வந்திருக்கும் காங்கிரஸ் தொண்டர்களில் ஸ்ரீ காமராஜ் நாடார் ஒருவர். பதவியினாலோ செல்வத்தினாலோ அல்லது இவற்றின் தியாகத்தினாலோ அன்றி, இடைவிடாத தேச ஊழியத்தினாலும் குணத்தின் மேன்மையினாலுமே தமிழ்நாட்டுக் காங்கிரஸின் தலைமைப் பதவிக்கு வந்தவர். காங்கிரஸின் சரித்திரத்தில் மிக நெருக்கடியான ஒரு சமயத்தில் ஸ்ரீ காமராஜ் தமிழ் நாட்டுக் காங்கிரஸின் தலைவரானார். அந்தப் பதவியை மிகத் திறமையாக வகித்து இறுதி வரையில் அவர் உறுதியாக நின்றதை எண்ணிப் பெருமையும் மகிழ்ச்சியும் அடைகிறோம்.

ஸ்ரீ காமராஜ் அவர்களைத் தமிழ்நாட்டுக்கு அளித்த விருதுநகரையும், அந்நகர் வாசிகளையும் வாழ்த்துகிறோம்.





# ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

**உதவும் சங்கீதக் கச்சேரி**

★

## மதுரை காலேஜ் நிதிக்காக

**ஜூலை மீ 28-ம்௳ சனிக்கிழமை மாலை 7-மணிக்கு**

## மதுரை சிந்தாமணி டாக்கீஸில்

★

| | | |
|---|---|---|
| தஞ்சாவூர் டி. டி. சங்கரய்யர் | .... | பிடில் |
| கல்பாத்தி ராமனாதன் | .... | மிருதங்கம் |
| மதராஸ் வேணு நாயக்கர் | .... | கஞ்சிரா |
| ஆலங்குடி ராமச்சந்திரன் | .... | கடம் |

★

டிக்கெட்டுகள் : ரூ. 250/- 100/- 25/- 10/- & 5/-

மதுரையில் கீழ்க்கண்ட இடங்களில் டிக்கெட்டுகள் கிடைக்கும்.

- *சிந்தாமணி டாக்கீஸ், கீழவெளி வீதி*
- *ராயல் டாக்கீஸ், தெற்கு மாசி வீதி*
- *காரிக்கார் & சூரி, பாலஸ் ரோடு*
- *மதுரை காலேஜ் ஆபீஸ்*

---

மைக், ஒலிபெருக்கி ஏற்பாடுகள் :

**திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்வீஸ்.**



கல்கி

மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 48

# என்ன சேதி?

## கிளர்ச்சியும் ......

சென்ற வாரத்தில் ஸிம்லா மகா நாட்டையும் அரசியல் நெருக்கடியையும் தூக்கி யடிக்கும்படியான ஒரு நெருக்கடி சென்னை மாகாணத்தில் ஏற்பட்டுப் பெருங் கலக்கத்தை விளைவித்தது. அது தான் மாணாக்கர் நெருக்கடி. ஆயிரம், பதினாயிரம் என்று பணத்தைச் செலவு செய்து படித்து விட்டு, வேலைக்காக இளைஞர்கள் அலைந்தது போக, படிப்பதற்கே இடத்திற்கு அலையும்படியான முழு மோச நிலைமை ஏற்பட்டது. கடன் வாங்கியும் பட்டினி என்பது போலவும், ஸ்வாமி வரம் கொடுத்தும் பூசாரி வரம் கொடாதது போலவும், மாணவர்கள் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை தேறியும் காலேஜில் இடமில்லாமல் திண்டாடினார்கள். டிராமா, ஸினிமா தியேட்டர்களில் சொல்வதைப் போல், "ஒரு ஸீட்டுக்கூடக் காலி இல்லை!" என்று காலேஜ் அதிகாரிகள் கையை விரித்தார்கள். கலாசாலைகளில் இடம் கிடைக்காத மாணவர்கள் என்ன செய்வதென்று தெரியாமல் கலங்கினார்கள். பெற்றோர்கள் முழி முழி என்று முழித்தார்கள்; சிலர் பத்திரிகைகளில் காரசாரமாகக் கடிதம் எழுதினார்கள். நகரத்தின் முதல் பிரஜையான, மேயர் ராதாகிருஷ்ணப் பிள்ளையும் சர்வகலாசாலை ஸிண்டிகேட்டுக்கும் வைஸ் சான்ஸலருக்கும் கடிதம் எழுதி, நெருக்கடியைத் தீர்த்து வைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

## ... அதன் பலனும்

இவ்வளவு கிளர்ச்சியும் கூக்குரலும் சென்னை சர்வ கலாசாலையைத் தட்டி எழுப்பி, கலாசாலை நெருக்கடி விஷயமாக யோசிக்கும்படி செய்தது. யோசித்ததின் பேரில் குறைந்த பட்சம் ஒவ்வொரு கலாசாலையிலும் அதிகப்படியாக 50 மாணவர்களைச் சேர்த்துக் கொள்ளும்படி அனுமதி கொடுத்திருக்கிறார்கள். இதன் பிரகாரம், சென்னை மாகாணத்திலுள்ள சுமார் 25 கலாசாலைகளில் சுமார் 1500 மாணவர்களுக்கு அதிகப்படி இடம் கிடைக்கும் என்று வைஸ் சான்ஸலர் கூறுகிறார்.

இந்த உத்தரவினால், சென்னை மாகாணத்தில் ஏற்பட்டிருக்கும் பள்ளிக்கூட நெருக்கடி தீர்ந்து போய்விடுமா? இதை உத்தேசித்தே வைஸ்சான்ஸலர் அணை கோலிக்கொண்டு "ஏற்கனவே கலாசாலைகளில் எத்தனை மாணவர்களை அனுமதிக்க முடியுமோ, அதற்கு மேலேயே அனுமதித்தாகி விட்டது. இனிமேல் சேர்த்துக் கொண்டால் படிப்பின் தரம் குறைந்து போகும்" என்கிறார். தரம் குறையாத கலாசாலைகளிலும் பள்ளிக் கூடங்களிலும் விசாலமான இடங்களில் காற்றோட உட்கார்ந்து படித்தவர்கள் எல்லாம் என்னத்தைப் புரட்டி விட்டார்கள் என்பதுதான் தெரியவில்லை! இந்த மாதிரி பள்ளிக் கூடங்களிலும் கலாசாலைகளிலும் இட நெருக்கடி ஏற்படும் என்பதை முன் கூட்டி ஊகித்து அதற்கு வேண்டிய முன் ஜாக்கிரதையான ஏற்பாடுகள் செய்வதற்கு அந்த மேதாவிகளுக்குத் தெரியவில்லை. இப்படிப்பட்ட அழகான படிப்புப் படிப்பதற்காக அடித்துக் கொள்ளும் மாணவர்களுக்குப் பரிதாபப் படுவதா, அல்லது அவர்களுக்கு இடம் கொடுத்தால் படிப்பின் தரம் குறைந்து உலகம் புரண்டு நாசமாய்ப் போய்விடும் என்று சொல்லும் பிரகஸ்பதிகளைப் பார்த்து இரக்கப்படுவதா என்று நமக்கும் தெரியவில்லை!

## மகத்தான நஷ்டம்

கர்நாடக சங்கீத உலகமானது சென்ற வாரத்தில் ஒரே நாளில் இரண்டு அரிய பெரிய நிதிகளை இழந்து விட்டது.

ஈடு செய்ய முடியாததாகத் தானே நஷ்டம் என்றே சொல்ல வேண்டும்.



காயக சிகாமணி
ஸ்ரீ முத்தையா பாகவதர்

சங்கீத கலாநிதி ஸ்ரீ கே. பொன்னையாப் பிள்ளை ஜூன் மீ 30உ தஞ்சையில் காலமானார். பரம்பரையாக, வாழையடி வாழையாக, கர்நாடக சங்கீதத்தை வளர்த்து வந்த சங்கீத குடும்பத்தில் வந்தவர். சிதம்பரம் அண்ணாமலை சர்வகலாசாலையினால் நடத்தப்படும் சங்கீத கலாசாலையில் ஆசிரியராகவும் பிரின்ஸ்பாலாகவும் இருந்து எத்தனையோ சங்கீத பூஷணங்களைத் தமிழ் நாட்டுக்கு அளித்தவர். சென்னை சங்கீத வித்வத் சபை (மியூஸிக் அகாடமி)க்குத் தலைமை வகித்தவர். அவருடைய மாமனாகிய பரத நாட்டிய கலாநிதி பந்தநல்லூர் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களுக்கும், அவருடைய புதல்வர்களாகிய சங்கீத வித்வான்கள் ஸ்ரீ கே. பி. கிட்டப்பா, ஸ்ரீ கே. பி. சிவானந்தம் ஆகியவர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஸ்ரீ கிட்டப்பாவும் சிவானந்தமும் தந்தையிடமிருந்து பெற்ற சங்கீதக் கலைச் செல்வத்தை மேலும் மேலும் வளர்த்து மற்றவர்களுக்கும் பகிர்ந்தளித்துக் குடும்பத்தின் பெயர் விளங்கச் செய்வார்கள் என்று நம்புகிறோம்.

## காயக சிகாமணி

காயக சிகாமணி சங்கீத கலாநிதி அரிகேசவநல்லூர் முத்தையா பாகவதர் என்று சொன்னால், பாடத் தெரியாதவர்களுக்கெல்லாம் பாட வரும்; பேசத் தெரியாதவர்களுக்கெல்லாம் பேச வரும்; இன்னிசையும் செந்தமிழும் சேர்ந்து வரும். கதா காலக்ஷேபம் என்னும் அபூர்வமான கலையில் நெடுங்காலம் நிகரற்று விளங்கினார். அவர் காலக்ஷேபம் செய்யும்போது எதுகை மோனைகளும் பிராஸங்களும் சிலேடைகளும் நீ முந்தி நான் முந்தி என்று போட்டி போட்டுக்கொண்டு வரும். காயக சிகாமணியின் சங்கீத வித்தைத் திறமையைப் பற்றியோ சொல்லவேண்டியதில்லை. சங்கீத வித்வத் சபைகளில் ஸ்ரீ முத்தையா பாகவதர் வந்து அமர்ந்துவிட்டால் எந்த விவாதத்திலும் அவர் கூறியதே முடிவான தீர்ப்பாயிருக்கும். மற்ற வித்வான்களுக்கு மத்தியில் ஸ்ரீ முத்தையா பாகவதர் மத்தகஜத்தைப் போலவும் புருஷ சிம்மத்தைப் போலவும் ஜாதி ரிஷபத்தைப் போலவும் கம்பீரமாக விளங்குவார். அத்தகைய மகாவித்வானை இழந்துவிட்டது நமது துர்ப்பாக்கியந்தான். பாகவதரின் குமாரர் ஸ்ரீ எச். எம். வைத்திலிங்கம் அவர்களுக்கு நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



சங்கீத கலாநிதி
ஸ்ரீ பொன்னையாப் பிள்ளை

## உலகநாதர் பிரிவு

சங்கீத உலகத்தோடு போட்டி போட்டுக்கொண்டு தமிழ் உலகமும் சென்ற வாரத்தில் ஒரு பெரிய நஷ்டத்தை அடைந்திருக்கிறது. ஆசிரியர் திரு வி. கலியாணசுந்தர முதலியாரின் அருமைத் தமையனார் ஸ்ரீ திரு வி. உலகநாத முதலியார் காலமான செய்தி கேட்டுப் பெரிதும் வருந்துகிறோம். ஸ்ரீ உலகநாத முதலியார் தமிழாராய்ச்சியில் சிறந்தவர்; சைவ சித்தாந்த ஆராய்ச்சியில் தலைசிறந்தவர். தமிழுக்கும் சைவத்துக்கும் அளவற்ற தொண்டுகள் புரிந்தவர். தமிழ்ப் புத்தகம் ஒன்று அழகாகவும் பிழையின்றியும் அச்சிடப்பட்டிருந்தால் அதன் கடைசிப் பக்கத்தின் அடியில் "சாது அச்சுக் கூடம்" என்று போட்டிருக்கிறதா என்று பார்க்கத் தோன்றும். இராம லக்ஷ்மணர்களைப்போல் ஸ்ரீ உலகநாத முதலியாரும், கலியாணசுந்தர முதலியாரும் சகோதர பாசத்துக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்து வந்தார்கள். அவர்களில் ஒருவர் இப்போது பிரிந்துவிட்டார். ஆசிரியர் திரு. வி. க. அவர்களுக்கு ஆறுதலும் சாந்தியும் அளிக்கவேண்டுமென்று அன்பே உருவமான ஆண்டவனை வேண்டுகிறோம்.

# பொல்லாதவர்கள்!

பிரிட்டிஷார் பொல்லாதவர்கள்!

அடே அப்பா! ரொம்பவும் பொல்லாதவர்கள்!

அவர்களுடைய பொல்லாத் தனத்துக்கு எல்லையே கிடையாது!

மிக மிகப் பொல்லாதவர்கள்!

• • •

'பொல்லாதவர்கள்' என்று நாம் சொல்லும்போது என்ன பொருளில் சொல்கிறோம் என்பதை நேயர்கள் சரியாக அறிந்து கொண்டிருப்பார்கள். 'கெட்டிக் காரர்கள்' 'அசாத்திய கெட்டிக் காரர்கள்' 'அவர்களுடைய கெட்டிக் காரத்தனத்துக்குத் திருடப் போக வேண்டியதுதான்' என்ற கருத்துக்களைத்தான் வெளியிடுகிறோம்.

• • •

உலக படத்தை ஒரு தடவை அசைப்பிலே பார்த்தால் போதும்; பிரிட்டிஷார் எவ்வளவு கெட்டிக்காரர்கள் என்பதை உடனே பிரத்யட்சமாய்க் காணலாம்.

இந்தப் பரந்த நில உலகத்தின் ஒரு மூலையில் நாலுபுறமும் கொந்தளிக்கும் கடலால் சூழப்பட்ட ஒரு சின்னஞ் சிறு தீவு பிரிட்டிஷாருக்கு ஜன்ம தேசம். அந்தச் சிறு தீவிலிருந்து அவர்கள் எவ்வளவு நீளமாயும் அகலமாயும் கையை விரித்துக் காலை அகட்டி உலகத்தையே வளைத்துக் கட்டியிருக்கிறார்கள், பாருங்கள்! இங்கிலாந்தைப் போல் எத்தனை மடங்கு அதிகமான பூப் பிரதேசங்களை யெல்லாம் ஆள்கிறார்கள்! பூமியை ஆள்வது இருக்கட்டும்! கடல்களையும் வானத்தையும் கூட அல்லவா வளைத்துக் கட்டியிருக்கிறார்கள்! பிரிட்டிஷாரின் கெட்டிக்காரத்தனத்துக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!

இது போகட்டும்; சமீபத்தில் நடந்த ஐரோப்பிய யுத்தத்தில் அவர்கள் ஜயித்தார்களே, அந்த சாமர்த்தியத்தைப் பற்றி என்னவென்று சொல்ல?

சொந்த வீரத்தினாலும் சொந்த வீரர்களைக் கொண்டுமே யுத்தம் செய்து ஜயித்தால் அது சாதாரண விஷயம்; உலகத்தில் இயற்கையாக நடக்கக் கூடியதுதான்.

பிரிட்டிஷார் இந்தத் தடவை ஜயித்தது உண்டே, அது அந்த மாதிரி சாதாரண விஷயமல்ல.

மற்றத் தேசங்களின் வீரர்களையும் ஆயுதங்களையும் கொண்டே யல்லவா யுத்தத்தில் மகத்தான வெற்றியை அடைந்திருக்கிறார்கள்!

ஐந்து வருஷம் நீடித்து நடந்த இந்தப் பயங்கரமான மகா யுத்தத்தில் பிரிட்டிஷ் சைன்யத்தில் உயிர்ச் சேதம் ஐம்பதினாயிரம் பேருக்கு மேல் இல்லையென்று சொன்னால், நம்புவதே கஷ்டமாயிருக்கிறதல்லவா? ஆயினும் அது உண்மைதான்!

இதற்கு முன் 1914 முதல் 1918 வரை நடந்த நாலு வருஷ மகா யுத்தத்தில் பிரிட்டிஷ் சைன்யத்தில் இருபது லட்சத்துக்கு மேல் சேதம்!

ஆனால் இந்தத் தடவை அதில் இருபதில் ஒரு பங்கு கூடச் சேதம் கிடையாது!

இந்தக் கெட்டிக்காரத் தனத்தைப் பற்றி என்னவென்று சொல்ல!

எல்லாருக்கும் தெரிந்த விஷயம்: இந்த யுத்த ஆரம்பத்தில் பிரிட்டிஷார் வெகு மோசமான நிலைமையில் இருந்தார்கள் என்பது.

இங்கிலாந்தில் அச் சமயம் ஒரு டாங்கி இல்லை! ஒரு பீரங்கி இல்லை! ஒரு பாம்பர் விமானம் இல்லை!

சைன்யம் யுத்தத்துக்குத் தயாராயில்லை! கடற்படையும் அப்படித்தான்!

பிரான்ஸ் — பெல்ஜியத்திலிருந்து ஓட்ட ஓட்டமாய்ப் பின்வாங்கித் தலை தப்பினது தம்பிரான் புண்ணியம் என்று பிரிட்டிஷ் துருப்புக்கள் 'டங்கெர்க்'கில் கப்பல் ஏறியது பற்றி உலகத்தில் எவ்வளவோ பேர் எவ்வளவோ தடவை பரிகாசம் செய்தாகி விட்டது.

அந்தப் பரிகாசம் எல்லாம் இப்போது பிரிட்டிஷார் பேரில் ஒட்டிக் கொண்டா இருக்கிறது!

ஒன்றுமில்லை!

முடிவில் அடைந்த வெற்றிதான் ஒட்டிக் கொண்டிருக்கிறது!

டன்கெர்க்கில் எந்த தளபதி மாண்ட்கோமரி பின் வாங்கி ஓடிப் படைகளைப் பத்திரமாய்க் கொண்டு வந்து சேர்த்தாரோ, அவரேதான் பின்னால் எல் அலமீனிலிருந்து ஆரம்பித்து வெற்றிக்குமேல் வெற்றியாக அடைந்து வந்து கடைசியில் ஜெர்மனிக்குள்ளும் புகுந்தார்.

பெயர் பெற்ற ஜெர்மன் சைன்யம் முதன் முதலாக அந்த மாண்ட்கோமரியிடம்தான் சரணடைந்தது!

அதைத்தான், அதாவது மாண்ட்கோமரியிடம் ஜெர்மன் சேனைபதி சரணமடைந்த காட்சியைத்தான் இன்றைக்குச் சினிமா செய்திப் படத்திலே காட்டுகிறார்கள்!

• • •

யுத்தத்தில் பிரிட்டிஷார் ஜயிப்பதற்குக் காரணமாயிருந்த புத்தி பலமானது அவர்களுடைய வளைந்து கொடுக்கும் தன்மையிலே வெளியாயிற்று.

பிரிட்டிஷாரின் யுத்த தந்திரம், இராஜ்ய தந்திரம், சாம்ராஜ்ய தந்திரம் எல்லாவற்றிலும் மேற்படி வளைந்து கொடுக்கும் தன்மையைக் காணலாம்.

எதற்கும் அசைந்து கொடாமல் ஒரே பிடிவாதமாகப் பனைமரம்போல் நிற்கும் தன்மை பிரிட்டிஷாரிடம் கிடையாது.

சமயம் வரும்போது நாணல்போல் வளைந்து கொடுப்பார்கள்; அபாயம் விலகியதும் நிமிர்ந்து நிற்பார்கள்.

காரியம் ஆகவேண்டியிருக்கும்போது விறைப்பும் ஜம்பமும் அவர்களிடம் காண முடியாது.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்!

யுத்தம் நடந்தபோது சர்ச்சில் துரை எத்தனை தடவை ஸ்டாலினையும், ரூஸ்வெல்ட்டையும் பேட்டி காண்பதற்கு ஓடினார்?

"ஸ்டாலின்தான் நம்மைத் தேடி வரட்டுமே?" ரூஸ்வெல்ட்டுதான் வரட்டுமே?" என்று இருந்தாரா?

ஒரு காலத்தில் 'திருடர்கள்' என்றும் 'கொலை பாதகர்கள்' என்றும் அவர் திட்டிய ருஷ்ய போல்ஷிவிக்கர்களுடனே எப்படி உறவு கொண்டாடினார்!

அமெரிக்கர்களை எப்படி யெல்லாம் ஸ்தோத்திரம் செய்தார்?

இதிலெல்லாம் சர்ச்சில் வெறும் வறட்டு ஜம்பம் பாராட்டியிருந்தால், இப்போது பிரிட்டனின் நிலைமை எப்படியிருந்திருக்கும்!

ஏன்? பாரிஸுக்குக்கூட அல்லவா பறந்து சென்று, டிகாலை ஆகாசத்திலே தூக்கி வைத்து, இந்திரன், சந்திரன் என்றெல்லாம் அவரை ஸ்தோத்திரம் பண்ணினார்!

அப்புறம், யுத்தத்தில் ஜயமடைந்தவுடனே, அதே டிகாலை ஸிரியா விஷயத்தில் எப்படி மட்டம் தட்டினார் பாருங்கள்!

• • •

பிரிட்டிஷாருடைய வளைந்து கொடுக்கும் தன்மை அவர்களுடைய அரசியல் முறையிலும் வெளியாவதைக் காணலாம்.

நாளது ஜூலை 5உ வியாழக்கிழமை இங்கிலாந்தின் பொதுத் தேர்தல் நடந்திருக்கும். பிரிட்டிஷ் மக்கள் வோட்டுப் போட்டிருப்பார்கள்.

வோட்டின் முடிவு இன்னும் வெளியாகவில்லை. அது வெளியாவதற்கு இன்னும் மூன்று வாரம் ஆகலாம்.

முடிவு என்ன ஆனால் என்ன?

அதைவிட முக்கியமானது தேர்தல் பிரசாரம் நடந்த முறைதான்.

எவ்வளவோ பெரிய விபத்திலிருந்து, பிரமாண்டமாக வந்த பேராபத்திலிருந்து, இங்கிலாந்தைக் காப்பாற்றியவர் வின்ஸ்டன் சர்ச்சில்.

ஆயினும் அப்பேர்ப்பட்ட மனிதரைச் சென்ற ஒரு மாதத்தில் பிரிட்டனில் பிய்த்து வாங்கிக்கொண்டிருந்தார்கள்!

அவரையும் அவருடைய கட்சியையும் அவருடைய கட்சிக் கொள்கைகளையும் சக்கைப் போடு போட்டார்கள்!

பிரமாதமான வாக்கு வாதங்களும் வாதப் பிரதிவாதங்களும் நடந்தன.

இவற்றிலிருந்து வெளியாவது என்ன?

சர்ச்சில் எவ்வளவு பெரிய மனிதரானாலும், எவ்வளவு அசகாய சூரரானாலும், அவரையே தெய்வமாகக் கருதி, அவர் இல்லாவிட்டால் உலகமே அஸ்தமித்துவிடும் என்று ஒப்புக் கொள்ள பிரிட்டிஷ் மக்கள் தயாராயில்லை என்பதுதான்.

சர்ச்சிலுக்குக் கூடத் தம்மைப் பற்றி அம்மாதிரி எண்ணம் கிடையாது என்பது வெளியாயிற்று.

தாம் இல்லாவிட்டாலும் பிரிட்டிஷ் ராஜ்யமும் சாம்ராஜ்யமும் நடந்து வரும் என்பதை அவர் எதிர்பார்த்து, பெர்லினுக்கு மூவர் மகாநாட்டுக்குத் தாம் போகும்போது, 'அடுத்த பிரிட்டிஷ் பிரதம மந்திரியாகக் கூடிய'

ஆட்சியையும் தம்முடன் வரும்படி அழைத்திருந்தார்!

இந்த மாதிரி வளைந்து கொடுக்கும் தன்மைதான் பிரிட்டிஷ் அரசியலின் பெரும் பலமாயிருந்து வருகிறது. மற்ற நாடுகளில் 'கெய்ஸர்'களும், 'ஜார்'களும், ஹிட்லர்களும், முஸோலினிகளும் இருந்த இடம் தெரியாமல் போய் விடுகிறார்கள்! அந்தந்த நாடுகளின் அரசியலில் தலைகீழான புரட்சிகளும், சமூக வாழ்வில் பிரமாதமான ஏற்றத் தாழ்வுகளும் நேரிடுகின்றன.

ஆனால் பிரிட்டிஷ் அரசியல் மட்டும் ஒரே மாதிரியாக, தேர்தல் பரபரப்பையும் வார்த்தைச் சண்டைகளையும் தவிர வேறு விபரீத மாறுதல் ஒன்றுமில்லாமல், நிதானமாகவும் சௌஜன்யமாகவும் நடந்து வருகிறது.

• • •

பிரிட்டிஷாரின் வளைந்து கொடுக்கும் தன்மையை அவர்களுடைய சாம்ராஜ்ய தந்திரத்திலும் நன்கு காணலாம்.

இதற்குச் சமீப காலத்து உதாரணம் வேவல் திட்டமேயாகும்.

இவ்வளவு பெரிய யுத்தத்திலே ஜயித்த பிறகு, அந்த கர்வத்திலும் இந்தியாவில் இன்னும் நீடித்த யதேச்சாதிகாரத்தை நடத்தலாமே என்று பிரிட்டிஷார் எண்ணவில்லை.

"காங்கிரஸைத்தான் அடக்கு முறையினால் அடக்கி விட்டோமே!" என்று இறுமாந்திருக்கவில்லை.

வளைந்து கொடுத்துச் சமரசம் உண்டு பண்ண இதுதான் தக்க சமயம் என்று தீர்மானித்தார்கள்.

வேவல் திட்டமும் வந்தது.

அந்தத் திட்டத்தைப் பற்றி யோசிக்க வேவல் யாரைக் கூப்பிட்டார்?

இத்தனை காலமும் சிறைச்சாலையிலே பூட்டி வைத்திருந்த காங்கிரஸ் தலைவர்களைத்தான் கூப்பிட்டார்!

அவர்களை ஸிம்லாவுக்கு அழைத்தார்! ஜாகை ஏற்படுத்திக் கொடுத்தார்; ரிக்ஷா ஏற்படுத்திக் கொடுத்தார்; கை குலுக்கினார்; விருந்து நடத்தினார்.

ஆட்சேபங்களுக்கெல்லாம் பொறுமையாகப் பதில் சொன்னார். "ஏதோ நீங்கள் பெரிய மனது செய்து இவ்விடம் விஜயம் செய்தாலே போதும்! மகாநாட்டுக்கு வந்துதான் பாருங்களேன்!" என்றார்.

வேவலுடைய வளைந்து கொடுக்கும் தன்மைக்கும், ஜனாப் ஜின்னாவின் வணங்காத விறைப்புக்கும் உள்ள வித்தியாசத்தைப் பாருங்கள்!

• • •

வேவல் இவ்விதம் வளைந்து கொடுத்ததில் என்ன லாபம் அடைந்திருக்கிறார்? அல்லது அடையப் போகிறார்?

ஏற்கனவே அவருக்கு ரொம்ப லாபம் கிடைத்து விட்டது.

காங்கிரஸ்வாதிகளைச் சிறையில் போட்டதால் பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டிருந்த கெட்ட பெயர் போய்விட்டது.

"பிரிட்டிஷாரைப் போல் தர்ம நியாயமானவர்கள் இல்லை" என்று உலக அபிப்பிராயம் ஏற்படுவதற்கு ஏதுவாகி விட்டது.

இது மட்டுமா?

ஸிம்லாவில் தலைவர்கள் மகாநாடு கூடிய பிறகு, காங்கிரஸும் லீகும் சேர்ந்து ஒற்றுமையாகப் பெயர்களைக் கொடுக்க முடியவில்லை.

எனவே, வேவலையே தீர்ப்புச் சொல்லும்படி கேட்கும் நிலைமை ஏற்பட்டு விட்டது.

மேற்படி புண்ணியத்தை ஜனாப் ஜின்னா கட்டிக் கொண்டார்.

இனிமேல் ஸிம்லா மகாநாடும் வேவல் திட்டமும் தோற்றுப் போனாலும், "பிரிட்டிஷார் பேரில் தவறில்லை. அவர்கள் இராஜ்யத்தைக் கொடுக்கத் தயாராயிருந்தார்கள். ஹிந்து-முஸ்லிம் தலைவர்கள்தான் ஒற்றுமைப்படாமல் காரியத்தைக் கெடுத்து விட்டார்கள்" என்று உலகம் நினைப்பதற்கு ஏதுவாகி விட்டது!

ஆஹா! பிரிட்டிஷார் பொல்லாதவர்கள்! சந்தேகமே இல்லை!

• • •

ஸிம்லாவில் கூடியிருக்கும் காங்கிரஸ் தலைவர்களைப் பொறுத்த வரையில், அவர்களும் பிரிட்டிஷாரின் 'பொல்லாத்தனத்தை'க் கூடிய வரையில் பின்பற்றி வருவதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறோம்.

பிரிட்டிஷாரின் விசேஷ இராஜ்ய தந்திரமான வளைந்து கொடுக்கும் தன்மையை நமது காங்கிரஸ் தலைவர்களும் மேற்கொண்டிருக்கிறார்கள். எவ்வளவோ வகையில் விட்டுக் கொடுத்துச் சமரசத்துக்குத் தாங்கள் தயாராயிருப்பதை நிரூபித்து வருகிறார்கள். ரொம்ப சந்தோஷம்!

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: டி. என். குப்புசாமி, திருக்கழுக்குன்றம்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

"ராஜாஜி ஒரு காங்கிரஸ்காரரா?" என்று சிலர் கேட்கிறார்கள். சேற்றில் மாட்டிக்கொண்ட காங்கிர வண்டியைத் தள்ளிவிட்டுக் கரை சேர்ப்பதற்காகவே தாம் காங்கிரஸிலிருந்து விலகிக்கொண்டதாக 1942-ல் ராஜாஜி கூறினர். அவ்விதமே அவர் செய்தாரா, இல்லையா?

சுயராஜ்யத்திற்கு வழி

காங்கிரஸ் அதிகாரத்தை ஏற்கு முன்னமேயே, எதிர்பாராத பல இடங்களிலிருந்து உத்தியோகத்துக் விண்ணப்பங்கள் வந்து குவிகின்றன.

வேலை திட்டம் ஒழிக

சீக்கியர்

தேசியவாதிகள்

தாழ்த்தப்பட்டவர்கள்

விண்ணப்பம்

-உம்மன்



"சுபாஷ் சந்திர போஸ் ஜப்பானியரின் ஆதரவில் இந்தியாவுக்குள் வருவதாயிருந்தால் அவரைக் கட்டாயம் எதிர்த்தே தீருவேன்" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறினர்.
ஜப்பானியன்




ஆனால், ஜப்பானியர் முறியடிக்கப்பட்டபின் வந்தாலோ, அவரை வரவேற்கத் தாம் தயாராயிருப்பதாகவும் பண்டிதர் கூறினர்.
ஜப்பானியன்




பொதுத்தேர்தலை முன்னிட்டு சர்ச்சில் துரை சமீபத்தில் கிளாஸ்கோ நகரத்துக்கு விஜயம் செய்தபோது அங்கே இம்மாதிரி எதிர்பாராத ஆதரவு கிடைத்ததாம்!

# புது உலகம் பார்த்தேன்

ரா.கி.

சென்ற ஜூன் மீ 23உ திருச்சிக்கு அருகிலுள்ள பொன்மலைக்குப் போயிருந்தேன். அங்கே ஒரு அபூர்வமான காட்சியைக் கண்டேன்.

இருபதினாயிரம் அரசர்கள் அவ்விடத்தில் மகாநாடு கூடியிருந்தார்கள்!

(என்ன? என்ன? இருபதினாயிரமா?)

மன்னிக்க வேண்டும்! இருபதினாயிரம் என்று சொன்னது ஒருவேளை தவறாயிருக்கலாம். இருபத்தையாயிரம் அல்லது முப்பதினாயிரம் இருந்திருக்கக் கூடும். கூட்டம் ஓர் அளவுக்குமேல் போய்விட்டால் நிர்ணயமாகக் கணக்கிடுவது கடினமல்லவா?

(கணக்கு இருக்கட்டும் கணக்கு! இருபதினாயிரம் அல்லது முப்பதினாயிரம் பேர் கூடியிருந்தார்களே? அவர்கள் யார்? அத்தனை பேரும் அரசர்களா?)

ஓஹோ! அதைக் கேட்கிறீர்களா? ஆமாம், அத்தனை அரசர்கள் தான்! அல்லது ராஜாக்கள், மன்னர்கள் என்று வேண்டுமானாலும் சொல்லலாம்.

(இதென்ன கூத்து! முப்பதினாயிரம் அரசர்கள் எப்படியிருக்க முடியும்? அவர்கள் ஒவ்வொருவருக்கும் இராஜ்யம் உண்டா!)

சரியான கேள்வி! இதை முன்னமே கேட்பதுதானே? பொன்மலையில் கூடிய முப்பதினாயிரம் அரசர்களில் மிகப் பெரும்பான்மையோருக்குத் தினசரிச் சம்பளம் ஒன்பதே காலணா! அதாவது 111 தம்பிடி!

ஆம்; தனித்தனியாக இருக்கும்போது அவர்கள் சாதாரணத் தொழிலாளிகள்; ஒன்பதே காலணாக் கூலிக்காரர்கள்; பஞ்சப்படி வேண்டுமென்று முறையிடுகிறவர்கள்; ஆனால் ஒரிடத்தில் ஒன்றாகத் திரண்டு கூடிவிட்டால் அவர்கள் தான் அரசர்கள்! அவர்கள் தான் தேசத்தின் அரசாங்கத்தை நடத்துகிறவர்கள்! அல்லது நடத்தப் போகிறவர்கள்!

தொழிலாளிகள் ஒன்றுகூடி ஒரிடத்தில் திரண்டு விட்டார்களானால், தங்களுடைய பலம் எத்தகையது என்பதையும் உணர்ந்து விட்டார்களானால், உணர்ந்து அந்தப் பலத்தைச் சரியான முறையில் உபயோகப் படுத்தவும் தெரிந்து கொண்டார்களானால், அப்புறம் அவர்களால் சாதிக்க முடியாத காரியம் ஒன்றுமே கிடையாது!

அதல பாதாளத்தில் வீழ்ந்து கிடக்கும் தேசத்தை அவர்களால் மகோந்நத நிலைமைக்குக் கொண்டுவர முடியும். அடிமையில் ஆழ்ந்திருக்கும் நாட்டைச் சுதந்திர நாடாகச் செய்ய முடியும். தரித்திரம் பிடுங்கித்தின்னும் நாட்டைச் செல்வம் கொழிக்கச் செய்ய முடியும். எப்பேர்ப்பட்ட கோர ராட்சதர்கள் எவ்வளவு பயங்கர இரகசிய ஆயுதங்களுடன் படையெடுத்து வந்தாலும் அவர்களை எதிர்த்து நின்று தாய் நாட்டைக் காப்பாற்ற அவர்களால் முடியும்.

ஜனசக்தி செய்யக்கூடிய இந்த மகத்தான அற்புதங்களெல்லாம் சமீபகாலத்தில் ருஷியா தேசத்தில் நடந்திருப்பதை நாம் அறிந்தோம். பத்திரிகைகள் — புத்தகங்கள் மூலமும் ரேடியோ மூலமும் அறிந்தோம்.

அதே அற்புதத்தைப் பொன்மலையில் நேருக்கு நேர் பார்க்க முடிந்தது. அவ்வளவு பெரிய அளவிலே அல்ல; சின்ன அளவிலே தான். ஆனாலும், அற்புதம் இரண்டு இடத்திலும் ஒன்றே என்பதில் சந்தேகமில்லை.

ஜனசக்தி உதயமாகும்போது ருஷியாவிலும் இதுபோல் சிறு அளவில்தான் உதயமாயிற்று. அதுதான் இவ்வளவு பிரம்மாண்டமான சக்தியாகப் பரிணமித்தது.

அதுபோலவே பொன்மலையில் இன்று சிறு அளவில் உதயமாகியிருக்கும் ஜனசக்தியானது இன்னும் பத்து வருஷத்திலோ, இருபது வருஷத்திலோ, முப்பது வருஷத்திலோ அபரிமிதமாக வளர்ந்து இந்திய தேசம் முழுவதிலும் புதிய பொன் யுகத்தை ஸ்தாபிக்காதென்று யார் சொல்லமுடியும்?

(இது என்ன பரவசம்! பொன்னுலகமாவது! புது யுகமாவது! பொன் மலையிலே அப்படி என்னதான் பிரமாதம் நடந்தது?)

மன்னிக்கவேண்டும். இதோ ஆரம்பத்திலிருந்து தொடங்குகிறேன்.

* * *

பொன்மலையில் நடைபெற்ற சென்ற ஜூன் 22, 23, 24உகளில் நடந்த ரயில்வே

தொழிலாளரின் மாபெரும் மகாநாட்டுக்குப் போயிருந்தேன். ரயில் வண்டியில் ஏறித்தான் சென்றேன்.

வெகு காலமாக ரயிலில் ஏறிச் செல்லும் போதெல்லாம் எனக்கு ஒரு யோசனை ஏற்படுவதுண்டு. ரயில் ஓடும்போது அதன் சக்கரங்கள் என்னமோ சொல்லுகின்றனவே, அவை சொல்வது என்ன என்று அடிக்கடி யோசனை உண்டாகும். ரயில் சக்கரங்கள் நம் காதிலே வந்து எதையோ திரும்பத் திரும்ப ஓதுவதுபோலிருக்கும்; ஆனால் என்ன என்பது மட்டும் விளங்காது. எப்போதோ கேட்ட ஏதோ ஒரு பாட்டின் வார்த்தைகள் மறந்துபோய், அவற்றை ஞாபகப்படுத்திக் கொள்ள முயலும்போது நமக்கு ஏற்படும் சங்கடத்தைப்போல் இதிலும் உண்டாகும்.

மேற்படி சங்கடம் இந்தப் பிரயாணத்தின்போதுதான் எனக்கு நிவர்த்தியாயிற்று. ரயிலின் சக்கரங்கள், “புரட்சி ... ஓங்க!” “புரட்சி ... ஓங்க!” “புரட்சி ... ஓங்க!” என்னும் வார்த்தைகளைத்தான் திரும்பத் திரும்பச் சொல்லுகின்றன என்று தெரிந்துகொண்டேன்.

இப்படி அது இந்தத் தடவை மட்டும் எனக்குத் தெளிவானது ஏன் என்றால் சென்ற இரண்டு மாதகாலத்தில் ரயில்வேத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த தோழர்கள் செய்த காரியங்களினால்தான்.

நமது இந்தியா தேசத்திலேயே மிகச் சிறந்த முறையில் அமைக்கப்பட்டு நடந்துவரும் தொழிலாளர் சங்கங்களில தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கம் முதன்மையானது என்பது நேயர்களுக்குத் தெரிந்திருக்கலாம்; அல்லது இப்போதாவது தெரிந்துகொள்ள வேண்டும்.

தென்னிந்திய ரயில்வேயில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் மொத்தம் 40 000 பேர். இவர்களில் 30 000 பேருக்கு மேல் இச் சங்கத்தில் சேர்ந்திருக்கிறார்கள்.

அப்படிச் சேர்ந்திருப்பவர்களில் ஸ்டேஷன் மாஸ்டர்கள், டிக்கட் குமாஸ்தாக்கள் முதற்கொண்டு ‘காங்கி’க் கூலியாட்கள் வரையில் இருக்கிறார்கள்.

படித்த உத்தியோகஸ்தர்கள், படிக்காத தொழிலாளிகள் என்ற வித்தியாசம் இன்றி அனைவரும் சேர்ந்திருக்கிறார்கள். பார்க்கப் போனால் ரயில்வே வழியத்தில் அம்மாதிரி வித்தியாசம் அதிகம் இல்லைதான். ஸ்டேஷன் மாஸ்டர்களும், குமாஸ்தாக்களும் மற்ற எழுத்து வேலையோடு டிக்கட்டைப் ‘பஞ்ச்’ செய்து கொடுக்கும் கைத்தொழிலையும் செய்ய வேண்டியிருக்கிறதல்லவா?

இவ்வளவு நல்ல முறையில் அமைந்த ரயில்வேத் தொழிலாளர் சங்கத்தின் ஒன்பதாவது வருஷ மகாநாடுதான் பொன்மலையில் நடந்தது.

மேற்படி மகாநாட்டுக்குப் பூர்வாங்கமாக, சுமார் 400 தோழர்கள் 16 கோஷ்டிகளாகப் பிரிந்து தென்



டாக்டர் அஷ்ரப்

(மகாநாட்டின் இளந் தலைவர்—பொதுவுடைமைக் கட்சியின் தீரர்களில் ஒருவர்.)



டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன்

(சர்க்காருக்குப் பிரதிநிதியாக மகாநாட்டைத் திறந்துவைத்து உணர்ச்சி ததும்பப் பேசினார்.)



வரவேற்புக் கமிட்டித் தலைவர்

(“கலகக் கும்பலை அடியோடு ஒழித்துவிட வேண்டும்!”)

னிந்தியாவில் ரயில் எங்கெங்கே செல்கிறதோ அங்கெல்லாம் சென்றார்கள். 80 ரயில்வே ஸ்டேஷன்களில் 100 பொதுக் கூட்டங்களுக்கு மேல் நடத்தினார்கள். அவர்கள் போன இடமெல்லாம், "புரட்சி—ஓங்குக!" என்ற கோஷத்தைக் கிளப்பினார்கள். ஆங்காங்கே அவர்களுடைய கோஷத்துக்குப் பிரதித்வனிகளும் கிளம்பின. ஸ்டேஷன் மாஸ்டர்கள், டிக்கட் பரிசோதகர்கள், பத்திரிகைப் பையன்கள், பிரயாணிகள், தண்டவாளங்கள் உள்பட, "புரட்சி—ஓங்குக!" என்று கோஷித்திருக்கும்போது ரயில் சக்கரங்கள் அவ்விதம் கோஷம் செய்வதற்குக் கேட்கவா வேணும்?

மேற்கண்டவாறு ரயில் போன இடமெல்லாம், தண்டவாளம் போன இடமெல்லாம் சென்று, பொன்மலையில் நடக்கப் போகும் ரயில்வேத் தொழிலாளர் மகாநாட்டைக் குறித்துப் பிரசாரம் செய்த தோழர்கள் ஆங்காங்கே மகாநாட்டுக்காகப் பண வசூலும் செய்தார்கள். சங்க கிளைகள் மொத்தம் ரூ. 25,000 கேட்டிருந்தார்களாம். ஆனால் வசூலானது முப்பத்தேழாயிரம் ரூபாயாம்! (தமிழ் நாட்டில் இப்போது எந்த நல்ல காரியத்துக்குமே கேட்டதைவிட அதிகப் பணம் வசூலாவது வழக்கமாகி வருகிறது!)

"அடே அப்பா! முப்பத்தேழாயிரம் ரூபாயா? மகாநாட்டுச் செலவுக்காகவா? அவ்வளவு பணத்தையும் என்ன செய்தார்கள்?" என்று யாராவது கேட்பார்களோ, என்னமோ எனக்குத் தெரியாது. பொன்மலை மகாநாட்டுக்கு வந்து பார்த்தவர்கள் அவ்விதம் கேட்க மாட்டார்கள்.

இம்மாதிரி மகாநாட்டைச் சாதாரணமாய் வேறெந்த ஸ்தாபனமாவது நடத்தியிருந்தால் அநேகமாக மூன்று லட்சம் ரூபாய் செலவழித்திருக்கலாம்.

பந்தலும் கொட்டகையும் போடுவதற்கே முப்பதினாயிரம் ரூபாய் வேணுமென்று தோன்றியது.

மகாநாடு நடப்பதற்கு 30,000 பேர் உட்காரக் கூடிய அழகிய பந்தல்.

பிரதிநிதிகள் தங்குவதற்குப் பந்தல்.

மாதர்களுக்கென்று தனிப் பந்தல்.

வாலண்டியர்களின் முகாமிற்குப் பந்தல்.

பந்திக்கு 1,500 பேர் வீதம் பிரதிநிதிகள் சாப்பிடுவதற்குப் பந்தல்.

வைத்தியசாலை காரியாலயம் முதலியவற்றுக்குக் கொட்டகைகள்.

சமையலுக்குக் கொட்டகை.

கண்காட்சிக்குக் கொட்டகை.

இவ்வளவுக்கும் மின்சார தீபங்கள்.

இதையெல்லாம் யோசித்தால் மகாநாட்டுச் செலவுக்கு 35,000 ரூபாய் எந்த மூலை என்று தோன்றியது.

சமையல் நடக்கும் இடத்துக்குப் போய்ப் பார்த்தேன். வரிசையாக அடுப்பின் மேல் பெரிய பெரிய பிரம்மாண்டமான தவலைகளில் சாதம் கொதித்துக் கொண்டிருந்தது.

கத்திரிக்காயும் பூசினிக்காயும் ஒரு சிறு குன்றுபோல் கிடந்தன.

பெரிய பெரிய அண்டாக்களில் ரஸம் கொதித்தது. ரஸத்தின்மேலே மிதந்த முழு மிளகாய்களை நினைத்தால் இப்போது கூட எனக்கு நாவில் ஜலம் சொட்டுகின்றது!

இவ்வளவு சமையலுக்கும் சம்பளம் கொடுத்து நியமித்த சமையற்காரர்கள் மொத்தம் ஏழுபேர்தானாம்.



தோழர் ராமமூர்த்தி
(தொழிலாளருக்குத் தொண்டு செய்யச் சதா ஒற்றைக் காலால் நிற்பவர்.)

மற்றப்படி சமையல் செய்தவர்கள், பரிமாறியவர்கள் எல்லாரும் தொழிலாளிகளேதான்!

பந்தல் போட்டவர்கள், விளக்குப் போட்டவர்கள்—எல்லாரும் தொழிலாளிகள்தான்!

தொண்டர்கள் 500 பேரும் தொழிலாளிகள் என்று சொல்ல வேண்டியதில்லை.

அரிசி, பூசினிக்காய், வாழை இலை, தேங்காய் முதலியவற்றைத் தொழிலாளிகள் தலையில் சுமந்து கொண்டு வந்து சேர்த்தார்களாம்!

அவ்வளவு பிரம்மாண்ட மகாநாடு இவ்வளவு

குறைவான செலவில் நடத்ததின் இரகசியம் இப்போது தெரிகிறதல்லவா?

• • •

போதும், மகாநாட்டின் வர்ணனையை இத்துடன் நிறுத்திக் கொண்டு மகாநாட்டில் நடந்த காரியங்களைக் கொஞ்சம் கவனிக்கலாம். நான் கவனித்த வரையில், நாலு வகைப்பட்ட காரியங்கள் மகாநாட்டிலும் மகாநாட்டை யொட்டியும் நடைபெற்றன.

1. தொழிலாளரின் சொந்த வசதிகளைப் பற்றிய பிரச்னைகள்: சம்பள உயர்வு, பஞ்சப்படி, 'டெம்பரரி' வேலை முதலியவை.

2. பொது ஜனங்களின் நன்மைக்குரிய பிரச்னைகள்.

3. அரசியல் பிரச்னைகள்.

4. சமுதாய முன்னேற்றத்துக்கும் தொழிலாளரின் விழிப்புக்கும் உரிய நிர்மாண வேலைகள்.

• • •

இந்த நாளில் மாதம் இரண்டாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் செலவுக்குப் போதவில்லை என்று பஞ்சப்படி கேட்கிறார்கள்!

எனவே, தொழிலாளிகளின் மகாநாட்டில் சம்பளம் பஞ்சப்படி விஷயம் முதன்மையாகக் கவனிக்கப்படுவதில் சிறிதும் வியப்புக்கு இடமில்லை.

அதிலும் ரயில்வே தொழிலாளிகளின் சம்பள விகிதத்தைக் கொஞ்சம் கவனித்தோமானால், அது விஷயத்தைத் தவிர மற்றக் காரியங்களைத் தொழிலாளிகள் எப்படிக் கவனிக்க முடிகிறது என்றே தோன்றும்.

ரயில்வே சம்பளத்தைப் பற்றிய கன்றாவியான புள்ளி விவரங்களைச் சமீபத்திலேதான் நான் பார்த்தேன். அப்படியே பிரமித்துத் திகைத்து மூர்ச்சை அடைந்து விட்டேன். அப்புறம், பத்திரிகை சனிக்கிழமை வெளியாக வேண்டுமே என்ற கவலையினால்தான் போன மூச்சுத் திரும்பி வந்தது!

இதோ ரயில் வேலையில் சில சம்பள விகிதங்களைப் பாருங்கள்:—

| | | | | |
|---|---|---|---|---|
| டிக்கட் குமாஸ்தா | ரூ. | 25 | 1½ | 32½ |
| ஸ்டேஷன் மாஸ்டர் | ரூ. | 30 | 1½ | 40½ |
| ஸிக்னலர் | ரூ. | 30 | 1½ | 40½ |
| பிரேக் மென் | ரூ. | 15 | ½ | 18 |
| பாயிண்ட்ஸ் மென் | ரூ. | 12 | ½ | 15 |
| காங்கி மென் | ரூ. | 12 | ½ | 14 |
| வாச் மென் | ரூ. | 12 | 1 | 15 |

(அதாவது 'புக்கிங் கிளார்க்' என்னும் பெரிய பெயர் உடைய டிக்கட் குமாஸ்தாவின் சம்பளம் மாதம் ரூ. 25-ல் ஆரம்பமாகிறது. ரூ 1—8—0 வீதம் பிரமோஷன். ரூ 32—8—0க்குச் சம்பளம் வந்ததும் முற்றுப் புள்ளி.)



தோழர் ஜெயந்தா

(செங்கொடியைப் பறக்கவிட்டதுடன் காம் வகிக்க நின்று நீண்ட பிரசங்கம் செய்தார்.)



குருப் அப்துல் மஜீத்

("பிரயாணிகள் குறைகள் தீர வேண்டும்")



"நானே ஒரு கம்யூனிஸ்ட்!"

(காங்கிரஸ் ஊழியர் ஸ்ரீ வேலுநாயர் கிராமணியார் மகாநாட்டுப் பிரசங்கிகளில் முக்கிய ஸ்தானம் வகித்தார்)

சரி, மாதச் சம்பளக்காரர்களின் சம்பளத்தைப் பார்த்து மூர்ச்சை யடைந்தீர்களா? இனிமேல் தினசரிச் சம்பளக்காரர்களைக் கவனியுங்கள் :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கூலி ஆள் | 0 | 9 | 4×0 | 11 | 4 |
| பிட்டர், பாயிலர் | 0 | 10 | 0×1 | 2 | 0 |
| டர்னர், மோல்டர் | 0 | 12 | 8×1 | 2 | 0 |
| வெல்டர் | 0 | 12 | 0×1 | 2 | 0 |
| டின் ஸ்மித் | 0 | 10 | 0×1 | 2 | 0 |

இப்படி யெல்லாம் அபாரமான சம்பளங்களும் கூலிகளும் கொடுக்கப்பட்டு வரும்போது, ரயில்வே ஊழியர்கள் பணக்காரப் பிரயாணிகளிடம் சிரம தட்சிணையே வாங்கக் கூடாது என்று பிரசாரம் செய்தால் பலிக்கும் என்று தோன்றுகிறதா?

சம்பளத்தின் இலட்சணம் ஒரு புறம் இருக்க, ரயில்வேத் தொழிலாளிகளை இப்போது பெரிதும் கவலை வரும் இன்னொரு விஷயம் இருக்கிறது. அதாவது இந்த யுத்த காலத்தில் 'டெம்பரரி'யாகச் சேர்த்துக் கொண்டிருக்கும் தொழிலாளர்களை யுத்தம் முடிந்ததும் வீட்டுக்கு அனுப்பி விடுவார்களோ என்ற பயந்தான். இம்மாதிரி 'டெம்பரரி' தொழிலாளிகள் ஒன்றரை லட்சம் பேர் இந்தியா முழுவதிலும் இருக்கிறார்களாம். யுத்தத்திலிருந்து திரும்பி வருகிறவர்களுக்கு வேலை கொடுப்பதாக இவர்களைப் பலி கொடுத்து விடுவார்களோ என்ற பீதி ஏற்பட்டிருக்கிறது. அப்படிச் செய்வது பெரிய அநீதியாகும் என்பதில் சந்தேகமில்லை. அதை நினைக்கும் போதே பொன்மலை மகாநாட்டு வரவேற்புக் கமிட்டித் தலைவருக்கு மானம் கொதித்தது.

அந்தக் கோபத்தில் அவர் இங்கிலீஷ்கார சர்க்காரைப் பார்த்து, "நாங்களா 'டெம்பரவரி'கள்? நீங்கள் அல்லவா இன்றைக்கு வந்து நாளைக்குப் போகும் 'டெம்பரவரி'கள்! எங்களை 'டெம்பரவரி' என்று சொல்வதற்கு நீங்கள் யார்?" என்று கன கடுமையாகப் பேசினார். நிற்க.

தொழிலாளர் மகாநாட்டில் தொழிலாளர் கஷ்டங்களைப் பற்றிப் பேசுவது, தீர்மானிப்பது சாதாரண விஷயம். பொன்மலை மகாநாட்டில் இத்துடன் நிற்கவில்லை. அந்த மகாநாட்டில் நடந்த மற்ற மூன்று காரியங்கள் அசாதாரண விஷயங்கள்.

ரயில் பிரயாணிகளின் சௌகரியங்களைப் பற்றிக் கவனிப்பதற்காகவே ஒரு தனி மகாநாடு நடத்தி, உசிதமான தீர்மானங்களும் செய்தார்கள். தீர்மானங்கள் எல்லாம் உடனே காரியத்தில் நிறைவேறி ரயில் பிரயாணிகளுக்குப் பிரமாதமான வசதிகள் கிடைத்துவிடப் போகின்றன என்று நான் எதிர்பார்க்கவில்லை.

ஆனால் ரயில்வேத் தொழிலாளர்கள் பிரயாணிகளின் வசதிகள் விஷயத்தில் கவனம் செலுத்தியதே ஒரு நல்ல அறிகுறியாகும். தொழிலாளர் சங்கங்களுக்குத் தேசத்தின் பொது வாழ்க்கையில் சம உரிமையுண்டு என்பதை நிலைநாட்டுவதாகும்.

இதையும்விட முக்கியமான விஷயம், மேற்படி மகாநாடு தேசத்தின் அரசியல் நிலைமையைக் குறித்துக் காட்டிய சிரத்தையும் நிறைவேற்றிய தீர்மானமுந்தான்.

அந்தத் தீர்மானத்தை நேயர்கள் தினசரிகளில் படித்திருப்பார்கள்.

வேவல் திட்டத்தை நமது தேசத் தலைவர்கள் ஒப்புக்கொண்டு தேச விடுதலைக்கு அதைப் பயன்படுத்த வேண்டும் என்பதுதான் அதன் சாராம்சம்.

காங்கிரஸ்-லீக் — ஒற்றுமை என்னும் அடிப்படையின் மேல் தேசிய சர்க்கார் அமைய வேண்டும் என்று நெடுநாளாகப் பொது உடைமைக் கட்சியார் செய்து வரும் பிரசாரத்தை யொட்டியே மேற்படி தீர்மானமும் அமைந்தது.

இதில் விசேஷம் என்னவென்றால், அத்தனை ஆயிரம் தொழிலாளிகளும் தீர்மானம் என்ன சொல்கிறது என்பதை நன்கு தெரிந்து கொண்டு விவாதித்து வோட்டு செய்து நிறைவேற்றியதே யாகும்.

ஆம்; சென்னை முதலிய நகரங்களில் படித்துப் பட்டம் பெற்ற ஜனங்கள் கூடும் சபைகளில் அரசியல் பிரச்னைகளை எவ்வளவு நன்றாய்த் தெரிந்து கொள்வார்களோ, அதைப் போலவே பொன்மலைத் தொழிலாளர்களும் அரசியல் பிரச்னைகளை வெகு திட்பமாகவும் ஐயந்திரிபறவும் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.

மகாநாட்டில் பிரசங்கிகள் பேசும்போது இது விஷயம்



ஸ்ரீமதி தையநாயகி

(மகாநாட்டுக்குச் சுமார் ஆயிரம் பெண் மணிகள் — பலர் கைக் குழந்தைகளுடன் — விஜயம் செய்திருந்தார்கள்.)

வெகு நன்றாய்த் தெரிந்தது. சபையோருக்குப் பிடித்தமான அரசியல் கொள்கைகளைப் பிரசங்கிகள் வெளியிடும்போது காது செவிடுபடும்படியான கரகோஷம் சபையில் எழுந்தது. அவ்வளவாகப் பிடிக்காத விஷயங்கள் சொல்லப்படும் போதோ, கிணற்றில் கல் போட்டதுபோல் நிசப்தம் குடிகொண்டிருந்தது!

ரயில்வேத் தொழிலாளரிடம் கண்ட அரசியல் ஞானம் உண்மையில் அதிசயிக்கத் தக்கது தான். அவர்களை இவ்வளவு அரசியல் ஞானிகளாக்கியிருக்கும் கம்யூனிஸ்ட் தோழர்களின் ஊக்கத்தையும் முயற்சியையும் பாராட்ட வேண்டும்.



தோழர் ராமதாஸ்
(தொழிலாளர் இயக்க கீதங்களைப் பெருவாரியாகப் பொழிந்தார்!)

ஆம்; தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளரின் கட்டுப்பாட்டுக்கும் முன்னேற்றத்துக்கும் காரணமானவர்கள் பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்தவர்கள்தான். எனவே, மகாநாட்டை யொட்டி நடந்த கண் காட்சிகள், ஊர்வலங்கள், நாடக நிகழ்ச்சிகள், மேடை அலங்காரங்கள் எல்லாம் ஒரே ருஷிய மயமாய் இருந்ததில் ஆச்சரியம் இல்லை. தொழிலாளிக்கும் விவசாயிக்கும் சின்னமாகிய அரிவாள்—சுத்தி பதித்த செங்கொடி வானளாவப் பறந்தோடு, எங்கெங்கும் மேற்படி சின்னங்கள் காணப்பட்டன. கண்காட்சிச் சாலையில் ருஷியாவின் மகத்தான வெற்றி சம்பந்தமான படங்கள் முக்கிய ஸ்தானத்தை வகித்தன. எனினும், சிலர் அடிக்கடி சொல்வது போல், நமது பொதுவுடைமைத் தோழர்கள் அடியோடு ருஷியாவுக்குத் தங்கள் அறிவைத் தத்தம் செய்து விடவில்லை யென்பதும் மேற்படி கண்காட்சியிலிருந்து தெளிவாயிற்று. அநேக படங்களுக்கு அடியில் பாரதியாரின் கவிதைகளிலிருந்து மிகப் பொருத்தமான வரிகளைப் பொறுக்கி எடுத்து எழுதி யிருந்தார்கள்.

இந்தக் கண்காட்சியை ஒரு தொழிலாளி ஒரு தடவை நன்றாய்ப் பார்த்து விஷயத்தையும் தெரிந்து கொண்டு விட்டால், அவனுடைய உள்ளம் விரிந்து அவனுடைய வாழ்வின் நோக்கமே விசாலமாகிவிடும் என்பதில் ஐயமில்லை. அப்புறம் அவன் பழைய ஆளே அல்ல; புது உலகத்தைச் சேர்ந்த புதிய மனிதன்தான்.

"புது உலகம்" "புது உலகம்" என்று எத்தனையோ காலமாய்ப் படித்தும் கேட்டும் எழுதியும் வந்திருந்த எனக்கு, பொன்மலையில் புது உலகத்தையே பார்த்ததாகத் தான் தோன்றியது. புது உலகத்தின் ஒரு சிறு மூலைதான் அது. எனினும் அந்தச் சிறு மூலையைப் பார்த்ததிலிருந்து, புது உலகம் வரும்போது அது எவ்வளவு ஆனந்த அற்புத உலகமாயிருக்கும் என்பதைக் கற்பனை செய்து கொள்ளுதல் சாத்தியமாகிறது.

* * *

ஜாடையாக ஒரு விஷயம். சாதாரணமாய், தொழிலாளர் இயக்கத்துக்கு ஒரு பெரிய கேடு உண்டு. "தொழிற் சங்கத்தை நடத்துகிறோம்; தொழிலாளர்களுக்காக உயிரை விடுகிறோம்" என்று வெளியிலிருந்து சிலர் முன் வந்து சேர்ந்து கொள்வார்கள். ஏழைத் தொழிலாளிகள் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபட்டுத் தேடி, தங்கள் வயிற்றைக் காயவைத்து மீத்துக் கொடுத்த சந்தாத் தொகையில் 'கன்னம்' வைக்கத் தொடங்குவார்கள். இன்னும் சில சமயம் முதலாளிகளுடனேயே சேர்ந்து கொண்டு தொழிலாளிகளுக்குத் துரோகம் செய்வார்கள். இம்மாதிரி பல பாதகச் செயல்களினால் பல இடங்களில் தொழிலாளர் இயக்கம் ஓங்காமலே போய் விடுகிறது.

தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர்கள் இது விஷயத்தில் மிக்க பாக்கியம் செய்தவர்கள். சுயநலம் அறவே அற்ற தியாகிகளும், சமுதாயத் தொண்டுக்கென்றே வாழ்நாளை அர்ப்பணம் செய்தவர்களுமான ஊழியர்கள் ரயில்வேத் தொழிலாளர் சங்கத்துக்கு நிர்வாகிகளாகக் கிடைத்திருக்கிறார்கள். தொழிலாளரின் பரிபூரண நம்பிக்கையை அவர்கள் பெற்றிருக்கிறார்கள். தோழர் கலியாணசுந்தரம், தோழர் நம்பியார், தோழர் புருஷோத்தமன் என்ற பெயர்களைக் கேட்டாலே தொழிலாளரின் முகங்கள் மலர்ச்சி யடைவதைக் கண்டேன். இவ்வளவு ஒற்றுமையுடனும் பரஸ்பர நம்பிக்கையுடனும் நடைபெறும் ரயில்வேத் தொழிலாளர் சங்கத்தின் மூலமாகத் தென்னாடே மேன்மை யடையப் போகிறதென்ற உறுதியுடன் திரும்பினேன்.

# சிவகாமியின் சபதம்



கல்கி

## அத்தியாயம் 31

## புலிகேசி ஓட்டம்

மாமல்லரும் பரஞ்சோதியும் ஆயனரின் அரண்ய வீட்டுக்கு எப்படி வந்து சேர்ந்தார்கள், என்ன மனோ நிலையில் வந்து சேர்ந்தார்கள் என்பதைச் சற்றுக் கவனிப்போம்.

மணிமங்கலம் போர்க்களத்தில் மகேந்திர பல்லவரின் சிறு படை அடியோடு நாசம் செய்யப்பட இருந்த தறுவாயில் மாமல்லரும் பரஞ்சோதியும் பாண்டியனைப் புறங் கண்ட குதிரைப்படையுடன் வந்து சேர்ந்தார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் போர் நிலைமை அடியோடு மாறி விட்டது. சளுக்க வீரர் படை பின் வாங்க ஆரம்பித்தது. அவர்களைத் தொடர்ந்து போய் அடியோடு அழித்துவிட்டு வர மாமல்லர் எண்ணிய சமயத்தில் போர்க்களத்தில் ஒரு மூலையில் மகேந்திர பல்லவர் மரண காயப்பட்டுக் கிடப்பதாகச் செய்தி கிடைத்தது. மாமல்லரும் பரஞ்சோதியும் அவ்விடத்துக்கு ஓடிப் பார்த்த போது, காயம்பட்ட மகேந்திரரைப் பக்கத்து மணிமங்கலம் கிராமத்திலிருந்த அரண்மனை வீட்டுக்குத் தூக்கிக்கொண்டு போய்ச் சிகிச்சை செய்யப்பட்டு வருவதாகத் தெரிந்தது. சிநேகிதர்கள் இருவரும் உடனே அவ்விடத்துக்குச் சென்றார்கள். சிறிது நேரம் சிகிச்சைகள் செய்த பிற்பாடு மகேந்திரர் கண் திறந்து பார்த்தார். புதல்வனைக் கண்டதும் முதலில் அவருடைய முகத்தில் மகிழ்ச்சி தோன்றியது. மறு கணத்திலேயே அந்த மகிழ்ச்சி பாவம் மாறி அளவற்ற வேதனையும் கவலையும் அந்த முகத்தில் பிரதிபலித்தன.

“மகனே! உனக்குப் பெரிய துரோகம் செய்து விட்டேன்! என்னை மன்னிப்பாயா?” என்று அவருடைய உதடுகள் முணுமுணுத்தன.

“அதெல்லாம் ஒன்றுமில்லை, அப்பா! நீங்கள் கவலைப்பட வேண்டாம். நாங்கள் தான் சரியான சமயத்துக்கு வந்து சேர்ந்து விட்டோமே? சளுக்கர்கள் சிதறி ஓடுகிறார்கள்!...” என்றார் மாமல்லர்.

சக்கரவர்த்தி மீண்டும் ஸ்மரணையிழக்கும் தறுவாயில் இருந்தார். அவருடைய கண்கள் முக்கால்வாசி மூடிவிட்டன. மிகவும் மெலிந்த குரலில், தட்டுத் தடுமாறி “ஆயனரும்...... அவர் மகளும்......பத்திரமாய்......” என்று கூறிய போது, மாமல்லர் அவர்கள் காஞ்சி நகரில் பத்திரமாயிருப்பதைத் தந்தை தம்மிடம் தெரியப்படுத்துவதாக எண்ணிக் கொண்டார். அப்போது அவருடைய மனங் கனிந்ததோடு கண்களும் கசிந்தன. “ஆ! சக்கரவர்த்தி என்னுடைய மனோ நிலையை எவ்வளவு நன்றாய்த் தெரிந்து கொண்டிருக்கிறார்? இப்பேர்ப்பட்ட ஆபத்தான நிலையில்கூட ஆயனர்—சிவகாமியைப் பற்றி நான் கவலையாயிருப்பேன் என்பதை எண்ணி அவர்களுடைய க்ஷேம சமாசாரத்தை அறிவிக்கிறார் அல்லவா?” என்று நினைத்தவராய், “அப்பா! அது எனக்குத் தெரியும். நீங்கள் நிம்மதியாயிருங்கள்!” என்று சொல்வதற்குள் சக்கரவர்த்தி மறுபடியும் பிரக்ஞை இழந்து விட்டார்.

பின்னர், மாமல்லரும் பரஞ்சோதியும் சக்கரவர்த்தியைப் பத்திரமாகக்

காஞ்சி நகருக்குக் கொண்டு போக ஏற்பாடு செய்துவிட்டுப் போர்க்களத்தின் நிலைமையை ஆராய்ந்தார்கள். மகேந்திர பல்லவருடன் காஞ்சியிலிருந்து புறப்பட்டு வந்த சைன்யத்தில் பெரும்பகுதி வீரர்கள் மணிமங்கலம் போர்க்களத்தில் வீர சுவர்க்கம் புகுந்து விட்டதாக அறிந்தார்கள். சேனாபதி கலிப்பகையாரும் அந்தப் போர்க்களத்திலேயே உயிர் துறந்த செய்தியும் தெரிய வந்தது. மேலே தாங்கள் செய்ய வேண்டியது என்ன என்று மாமல்லரும் பரஞ்சோதியும் யோசனை செய்தார்கள். போர்க்களத்திலிருந்து ஓடிப்போன புலிகேசி சக்கரவர்த்தியைத் தொடர்ந்து போகலாம். ஆனால் அதற்கு வேண்டிய பலம் அவர்களிடம் அச்சமயம் இல்லை. ஏனெனில் குதிரைப் படையுடன் மட்டுந்தான் அவர்கள் முன்னதாக வந்திருந்தார்கள். காலாட்படை இன்னும் வந்து சேரவில்லை. மேலும் காஞ்சி நகரைச் சுற்றிலும் இன்னும் பல இடங்களில் சளுக்க வீரர்களின் சிறு படைகள் ஆங்காங்கே கிராமங்களில் புகுந்து ஜனங்களை இம்சித்துக் கொண்டிருப்பதாக அவர்களுக்குத் தகவல் தெரிய வந்திருந்தது. எனவே, அப்படிப்பட்ட கிராதக ராட்சதர்களை முதலில் ஒழித்துக் கிராம ஜனங்களைக் காப்பாற்றுவதுதான் தங்களுடைய முதல் கடமை யென்றும், அதற்குள் காலாட்படையும் வந்து சேர்ந்து விட்டால் பிறகு புலிகேசியின் பெரும் படையைத் தொடர்ந்து போகலாம் என்று தீர்மானித்தார்கள்.

அவ்விதமே மூன்று நாட்கள் சுற்றிச் சுற்றி வந்து காஞ்சிக்குக் கிழக்கிலும் தெற்கிலும் மேற்கிலும் சளுக்கர் படையே இல்லாமல் துவம்சம் செய்தார்கள். இதற்குள்ளாகக் காலாட்படையும் வந்து சேரவே மீண்டும் வடக்கு நோக்கிக் கிளம்பினார்கள். காஞ்சிக்கு வடக்கே மூன்று காத தூரத்தில் சூரமாரம் என்னும் கிராமத்துக்கு அருகில் மறுபடியும் ஒரு பெரும் போர் நடந்தது. இங்கே சளுக்கர் படைக்குத் தலைமை வகித்தவன் தளபதி சசாங்கன். இந்தச் சண்டையில் தளபதி சசாங்கனும் சளுக்க வீரர்களில் பெரும் பகுதியினரும் மாண்டார்கள். மற்றவர்கள் பின்



வாங்கிச் சிதறி ஓடினார்கள். பல்லவர் படை அவர்களைத் துரத்திக்கொண்டு வெள்ளாறு வரையில் சென்றது.

தளபதி சசாங்கனைப் பின்னால் நிறுத்திவிட்டுப் புலிகேசி சக்கரவர்த்தி முன்னதாகவே வெள்ளாற்றைக் கடந்து போய் விட்டதாக மாமல்லரும் பரஞ்சோதியும் அறிந்தார்கள். மாமல்லர் வெள்ளாற்றையும் கடந்து அப்பால் புலிகேசியைத் துரத்திக் கொண்டு போக விரும்பினார். கலிப்பகையின் மரணத்தினால் இப்போது பல்லவ சேனாதிபதியாகி விட்ட பரஞ்சோதியார் அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை.

"பிரபு! புலிகேசியின் சைன்யம் அழிந்ததெல்லாம் போக இன்னும் மூன்று லட்சத்துக்குக் குறைவில்லை. யானைப் படையிலும் பாதிக்கு மேல் திரும்பிப் போயிருக்கிறது. நமது பதினாயிரம் குதிரைப் படையோடும் முப்பதினாயிரம் காலாட் படையோடும் அவர்களைத் தொடர்ந்து வெகு தூரம் போவது யமன் வாய்க்குள் போவதாகவே முடியும்!" என்றார்.

"ஏது? ஏது? சேனாதிபதி பதவிக்கு வந்தவுடனேயே இவ்வளவு நிதானமும் ஜாக்கிரதையும் வந்துவிட்டதே? அழகுதான்!" என்று மாமல்லர் பரிகாசக் குரலில் சொன்னதற்கு, "ஐயா! அதனால் மட்டும் எனக்கு நிதானம் வந்துவிடவில்லை. வேறொரு காரணமும் இருக்கிறது. காஞ்சியில் சக்கரவர்த்தியின் தேக நிலைமை எப்படியிருக்கிறதென்று நமக்குத் தெரியாது. காஞ்சியைப் பாதுகாக்க அவர் திடமாக இருந்தால், நாம் புலிகேசியை வாதாபி வரையில் துரத்திக்கொண்டு போகலாம். யமன் வாய்க்குள்ளே வேணுமானாலும் தங்களுடன் நான் வருவதற்குச் சித்தமாயிருப்பேன். ஆனால், சக்கரவர்த்தியை ஸ்மரணை யிழந்த நிலைமையில் நாம் விட்டு விட்டு வந்தோம் என்பது தங்களுக்கு நினைவில்லையா? அவரை அப்படி விட்டு விட்டு நாம் நெடுந்தூரம் போய்க் கொண்டேயிருப்பது நியாயமா? கலிப்பகையும் போர்க்களத்தில் காலமாகி விட்டார். நாம் இல்லாத சமயத்தில் சக்கரவர்த்திக்கு ஏதேனும் நேர்ந்து விட்டால் பல்லவ ராஜ்யம் என்ன கதி ஆவது? சளுக்கர்களால் சூறையாடப் பட்டும் ஹிம்சிக்கப்பட்டும் தவித்துக் கொண்டிருக்கும் கிராமவாசிகளின் கதி என்ன? அவர்களுக்கு அன்னவஸ்திரம் அளித்துக் காப்பாற்றும் கடமையை யார் நிறைவேற்றுவார்கள்? மதுரைப் பாண்டியன் மீண்டும் பல்லவ ராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்? பிரபு! இதையெல்லாம் யோசித்துப் பார்த்து விட்டுச் சொல்லுங்கள். மேலே புலிகேசியைத் துரத்திக் கொண்டு போகத்தான் வேண்டும் என்றால் நான் சித்தம்!" என்றார் பரஞ்சோதி.

மகேந்திரருடைய தேக நிலைமையைப் பற்றிக் குறிப்பிட்டவுடனேயே மாமல்லருடைய மன உறுதி தளர்ந்துவிட்டது. சற்று நேரம் தலை குனிந்தபடி சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பின்னர் "சேனாபதி! நீங்கள் சொல்வது உண்மைதான். அது மட்டுமல்ல. நாம் இப்போது நமது சைனியத்துடன் முன்னேறினால் அவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள் இல்லை. போகும் வழியில் ஏற்கெனவே சளுக்க அரக்கர்கள் கிராமங்களைச் சூறையாடிக் கொண்டு போகிறார்கள். அவர்களுக்குப் பின்னால் நாமும் போனால் கிராமவாசிகள் எங்கிருந்து உணவு அளிப்பார்கள்? நாமும் சேர்ந்து அவர்களை ஹிம்சிப்பதாகவே முடியும். எல்லாவற்றுக்கும் காஞ்சிக்குத் திரும்பிச் சென்று தந்தையின் உடல் நிலை எப்படியிருக்கிறதென்று தெரிந்து கொள்வோம். அவரிடம் அநுமதி பெற்றுத் தக்க ஏற்பாட்டுடன் பிறகு திரும்புவோம்" என்றார்.

அதன்மேல் மற்றப் படைகளையெல்லாம் வெள்ளாற்றங் கரையிலேயே இரண்டு நாள் தங்கியிருந்து பிறகு திரும்பும்படி சொல்லிவிட்டு மாமல்லரும் பரஞ்சோதியும் மட்டும் காஞ்சியை நோக்கித் திரும்பினார்கள். திரும்பி வரும்போது ஆங்காங்கே கிராமங்களில் சளுக்க வீரர்கள் செய்துள்ள அட்டூழியங்கள் அவர்களுடைய கவனத்தைக் கவர்ந்தது. ஊரூராக வீடுகளிலும் குடிசைகளிலும் வைக்கோற் போர்களிலும் அறுவடைக்கு ஆயத்தமாயிருந்த வயல்

களிலும் சளுக்கர்கள் தீ வைத்திருந்தார்கள். எங்கே பார்த்தாலும் ஒரே சாம்பல் மயமாயிருந்தது. பல்லவ நாடே ஒரு பெரிய பயங்கர ஸ்மசான பூமியாக மாறி விட்டதாகத் தோன்றியது. இன்னும் சில கிராமங்களில் பெரிய ஓட்டு வீடுகள் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தன. சில இடங்களில் பெரிய பெரிய பச்சை மரங்கள் எரிந்து கொண்டிருந்தன. ஆங்காங்கு ஜனங்களின் அழுகைக் குரல எழுந்தது. மாமல்லரையும் பரஞ்சோதியையும் கண்டதும் ஜனங்கள் உரத்த சத்தமிட்டுப் புலப்பத் தொடங்கினார்கள். அப்படிப் புலம்பியவர்கள் பெரும்பாலும் வயோதிகர்களான ஸ்திரீ புருஷர்களும் சிறுவர் சிறுமிகளுந்தான். சளுக்க வீரர்கள் செய்த பயங்கர அட்டூழியங்களைப் பற்றி ஆங்காங்கே சிலர் சொன்னார்கள். சிற்பிகள் கால் கை வெட்டப்பட்டது பற்றியும் இளம் பெண்கள் சிறை பிடித்துப் போகப் பட்டதையும் ஆடு மாடுகள் வதைக்கப்பட்டது பற்றியும் ஜனங்கள் சொன்னதைக் கேட்டபோது மாமல்லரின் உடம்பில் ஓடிய ஒவ்வொரு சொட்டு இரத்தமும் கொதித்தது. கோபத்தினாலும் ஆத்திரத்தினாலும் மார்பு வெடித்து விடும் போலிருந்தது. தொண்டையில் ஏதோ வந்து சிக்கிக் கொண்டு மூச்சு விடுவதை மிகவும் கடினமாகச் செய்தது. நாக்கு உலர்ந்து மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. பரஞ்சோதியிடம் தமது கோபத்தையும் ஆத்திரத்தையும் வெளியிட்டு நாலு வார்த்தை பேசுவதற்குக்கூட மாமல்லரால் முடியாமல் போய்விட்டது.

சிற்பிகள் பலருக்கு நேர்ந்த கதியைப்பற்றிக் கேட்டபோது மாமல்லரின் இருதய அந்தரங்கத்தில், 'நல்ல வேளை! ஆயனரும் சிவகாமியும் காஞ்சிக் கோட்டைக்குள் இருக்கிறார்களே!' என்ற எண்ணம் ஓரளவு ஆறுதலையளித்தது. எனினும் சிற்பங்கள் அழிக்கப் பட்டதைப் பற்றி அறிந்தபோது மாமல்லபுரத்து அற்புதச் சிற்பங்களுக்கு என்ன கதி நேர்ந்ததோ என்ற ஐயம் உதித்து மிக்க வேதனையளித்தது. அதை நேரில் பார்த்துத் தெரிந்து கொள்வதற்காக மாமல்லரும் பரஞ்சோதியும் அதிவிரைவாக மாமல்லபுரம் சென்றார்கள். அங்கே சிற்பங்களுக்கு அதிகச் சேதம் ஒன்றுமில்லையென்று தெரிந்து கொண்டு காஞ்சிக்குப் பிரயாணமானார்கள். மாமல்லபுரத்திலிருந்து காஞ்சிக்குப் போகும் வழியில் ஆயனரின் அரண்ய வீடு இருந்ததல்லவா? அந்த வீட்டையும் பார்க்க வேண்டும், அதிலிருந்த தெய்விக நடனச் சிலைகளுக்கு ஒன்றும் சேதமில்லையென்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று மாமல்லர் விரும்பினார். ஆயனரின் வீட்டின் வழியாகப் போவது காஞ்சிக்குக் குறுக்கு வழியாகவும் இருந்தபடியால், அந்த அரண்யப் பாதையிலே அவர்கள் புகுந்து சென்றார்கள்.

ஆயனர் வீட்டு வாசலுக்கு வந்ததும் கதவு திறந்திருந்ததைப் பார்த்தார்கள். உடனேயே இருவருக்கும் 'திக்' என்றது. வீட்டின் முன் பக்கத் தோற்றமே ஒருவித மனக் கலக்கத்தை உண்டாக்கிற்று. ஏதோ ஒரு மகத்தான விபத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளப் போகிறோம் என்ற உள் உணர்ச்சியுடன் இருவரும் வீட்டுக்குள்ளே பிரவேசித்தார்கள்.

உடைந்தும் சிதைந்தும் அலங்கோலமாய்க் கிடந்த சிலைகளைப் பார்த்த போது இருவருக்கும் தங்களுடைய நெஞ்சு எலும்புகள் உடைவது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அவர்கள் காலடிச் சத்தத்தைக் கேட்டு, படுத்திருந்த ஆயனர் எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தார்.

காஞ்சியில் பத்திரமாக இருப்பதாக அவர்கள் எண்ணிக் கொண்டிருந்த ஆயனரை இங்கே கண்டதனால் ஏற்பட்ட வியப்பு ஒருபுறமிருக்க, பேயறைந்தவன் முகம்போல் காணப்பட்ட அவருடைய முகமும் வெறி கொண்ட அவருடைய பார்வையும் அவர்களுக்கு விவரிக்க முடியாத பீதியை உண்டாக்கிற்று.

இத்தகைய மனோ நிலையில் இருந்தவர்களைப் பார்த்து, "என் சிவகாமி எங்கே?" என்று ஆயனச் சிற்பியார் கேட்டதும், மாமல்லருக்கு மலை பெயர்ந்து தம் தலையிலேயே விழுந்து விட்டது போலிருந்தது.

# இரத்தம் கசிந்தது

மாமல்லர் கீழே விழுந்து விடுவாரோ என்ற பயத்தினால் பரஞ்சோதி அவருடைய கரத்தைப் பிடித்துக் கொண்டார். இருவரும் பேச நாவெழாமல் ஆயனரைப் பார்த்தபடியே நின்றார்கள்.

மீண்டும் ஆயனர், 'பல்லவ குமாரா! சிவகாமி எங்கே? என் கண்மணி எங்கே? ஆயனச் சிற்பியின் அருமைக் குமாரி எங்கே? மகேந்திர பல்லவரின் சுவீகார புத்திரி எங்கே? பரத கண்டத்திலேயே இணையற்ற நடன கலா ராணி எங்கே?'' என்று வெறி கொண்ட குரலில் கேட்டுக் கொண்டே போனார்.

மாமல்லருடைய உள்ளமானது பெரும் புயல் அடிக்கும்போது கடல் கொந்தளிப்பது போல் கொந்தளித்தது. ஆயினும் சிவகாமிக்கு என்ன நேர்ந்தது என்று தெரிந்து கொள்ளும் ஆவலினால் பல்லைக் கடித்து மனதை உறுதிப்படுத்திக் கொண்டு, பசையற்று வறண்ட குரலில், ''ஐயா! இந்தக் கேள்விகளையெல்லாம் நானல்லவா தங்களிடம் கேட்க வேண்டும்? தயவுசெய்து மனதை நிதானப்படுத்திக் கொள்ளுங்கள். சிவகாமிக்கு என்ன நேர்ந்தது? சொல்லுங்கள்!'' என்றார்.

ஆயனருடைய வெறி அடங்கியது. அவருடைய உணர்ச்சி வேறு உருவங் கொண்டது. கண்ணிலே நீர் பெருகிற்று. ''ஆமாம், பிரபு! ஆமாம்! என்னைத்தான் தாங்கள் கேட்க வேண்டும். சிவகாமியை இந்தப் பாவியிடந்தான் தாங்கள் ஒப்புவித்திருந்தீர்கள். நான்தான் என் கண்மணியைப் பறி கொடுத்து விட்டேன். ஐயோ! என் மகளே! சிவகாமி! பெற்ற தகப்பனே உனக்குச் சத்துருவானேனே!'' என்று கதறியவண்ணம் தலையைக் குப்புற வைத்துக்கொண்டு விம்மலானார்.

ஆயனரின் ஒவ்வொரு வார்த்தையும் நரசிம்மவர்மரின் இருதயத்தை வாளால் அறுப்பதுபோல் இருந்தது. சிவகாமி இறந்துபோய் விட்டாள் என்றே அவர் தீர்மானித்துக் கொண்டார்.

பொங்கி வந்த துயரத்துக்கும் ஆத்திரத்துக்கும் இடையே சிவகாமி எப்படி இறந்தாள் என்று தெரிந்து கொள்ளும் ஆவலும் எழுந்தது. ஒருவேளை சளுக்கர்களால் அவளுடைய மரணம் நேர்ந்திருக்குமென்ற எண்ணம் மின்னலைப்போல் உதயமாகி அவருடைய உடம்பையும் உள்ளத்தையும் அப்படியே இரண்டாகப் பிளப்பதுபோல் இருந்தது.

மீண்டும் ஒரு பெரு முயற்சி செய்து மனதைத் திடப்படுத்திக் கொண்டார். அதிகாரத் தொனியுடைய கடினமான குரலில், ''ஆயனரே! மறுமொழி சொல்லி விட்டு அப்புறம் அழும். சிவகாமி எப்படி இறந்தாள்? எப்போது இறந்தாள்?'' என்று கர்ஜித்தார்.

இந்த வார்த்தை காதில் விழுந்ததோ, இல்லையோ, உடனே, ஆயனர், ''ஆஹா! என் கண்மணி இறந்து விட்டாளா?'' என்று அலறிக் கொண்டு, படுத்திருந்தவர் எழுந்து நிற்க முயன்றார். கால் தடுமாறியது. பயங்கரமாக வீரிட்டுக் கொண்டு தொப் என்று தரையில் விழுந்தார்!

''இறந்து விட்டாளா?'' என்ற கேள்வியினால், சிவகாமி இறந்து விடவில்லையென்ற உண்மை மாமல்லரின் மனதில் பட்டது. ஆயனர் அப்படி நிற்க முயன்று விழுந்தபோது, அவருடைய காலில் ஊனம் என்னும் விவரமும் மாமல்லருக்குத் தெரிந்தது. இதனால் அவர் கல்லைப்போல் கடினப்படுத்திக் கொண்டிருந்த மனம் கனிந்தது. கண்ணிலே ஜலம் ததும்பிற்று. ''ஐயா! தங்களுக்கு என்ன?'' என்று கேட்டுக் கொண்டே பாய்ந்து சென்று ஆயனர் அருகில் உட்கார்ந்தார். அவருடைய வலது கால் முறிந்திருப்பது தெரிந்தது.

''ஐயோ! தங்கள் கால் முறிந்திருக்கிறதே? இது எப்படி நேர்ந்தது?'' என்று இரக்கத்துடன் வினவினார்.

"பிரபு! மலையிலிருந்து விழுந்து கால் முறிந்தது. என கால் முறிந்தால் முறியட்டும். சிவகாமி இறந்து விட்டதாகச் சொன்னீர்களே? அது உண்மைதானா?" என்று ஆயனர் கேட்டார். அந்தக் கேள்வியில் பரபரப்புடனே கூட உற்சாகமும் தொனிப்பதாகத் தோன்றியது. இதனால் குமார சக்கரவர்த்தியின் திகைப்பு அதிகமாயிற்று. "ஐயா! கொஞ்சம் நிதானித்துச் சொல்லுங்கள். சிவகாமியைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. நான் போர்க்களத்திலிருந்து நேரே வருகிறேன். நீங்களும் சிவகாமியும் காஞ்சியில் சௌக்யமாயிருப்பதாக எண்ணியிருந்தேன். நீங்கள் எப்படி இங்கே வந்தீர்கள்? சிவகாமியை எப்போது பிரிந்தீர்கள்? அவள் இறந்து விடவில்லையே? நிச்சயமாய்த் தெரியுமல்லவா?" என்று அமைதியான குரலில் பேசினார் மாமல்லர்.

இதற்கு நேர்மாறாக, அலறும் குரலில், "ஐயோ! சிவகாமி இறந்து போயிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்குமே?" என்றார் ஆயனர்.

"என்ன சொல்கிறீர், ஐயா! சிவகாமிக்கு என்னதான் நேர்ந்தது?"

"ஐயோ! எப்படி அதைச் சொல்வேன்? எல்லாம் இந்தப் பாவியினால் வந்த வினைதான்! பிரபு! சிவகாமியைச் சளுக்கர்கள் சிறை பிடித்துக் கொண்டு போய்விட்டார்கள்!"

"என்ன? என்ன?" என்று மாமல்லர் கேட்ட தொனியில், உலகத்திலேயே கண்டும் கேட்டுமிராத விபரீதம் — நம்ப முடியாத பெரும் விபத்து — நடந்து விட்டதென்று அவர் எண்ணியது புலனாயிற்று.

"ஆம், பிரபு! சிறை பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள். தாங்கள் சளுக்கர்களைத் தொடர்ந்து போனது பற்றிக் கேள்விப்பட்ட போது. சிவகாமியை விடுவித்துக் கொண்டு வருவீர்களென்று நம்பியிருந்தேன். என்னை ஏமாற்றி விட்டீர்கள்! ஆனால் உங்கள் பேரில் என்ன தப்பு? எல்லாம் இந்தப் பாவியினால் வந்ததுதான். சித்திரம், சிற்பம் என்று பைத்தியம் பிடித்து அலைந்தேன். என் உயிர்ச் சித்திரத்தை, ஜீவ சிற்பத்தைப் பறிகொடுத்தேன்! என்ன நிர்மூடன் நான்? என்ன கிராதகன் நான்? நாகநந்தி பிக்ஷு வந்து 'சிவகாமியைக் காப்பாற்றட்டுமா? மாமல்லபுரத்தைக் காப்பாற்றட்டுமா?' என்று கேட்டாரே? இந்தக் கிராதக ராட்சதன் அப்போது என்ன நினைத்தேன், தெரியுமா? 'சிவகாமி எப்படியும் மனுஷி; அநித்ய வாழ்வு உடையவள். மாமல்லபுரத்துச் சிற்பங்களோ பல்லாயிரம் வருஷங்கள் நிலைத்திருக்கக் கூடியவை' என்று எண்ணினேன் பாவி!......... ஐயோ! என் மகளுக்கு நானே யமன் ஆனேனே?"

இவ்வாறெல்லாம் ஆயனர் புலம்பியது மாமல்லரின் காதில் ஏறவே இல்லை. சிவகாமியைச் சளுக்கர் சிறை பிடித்துச் சென்றார்கள் என்னும் செய்தி ஒன்றுதான் அவர் மனதில் பதிந்திருந்தது. சிறிது நேரம் பிரமை பிடித்தவர்போல் உட்கார்ந்திருந்தார்.

பிறகு, தொண்டையைக் கனைத்துக் கொண்டு, மிக மெல்லிய குரலில் "சிற்பியாரே! இதெல்லாம் எப்படி நடந்தது? காஞ்சியிலிருந்து நீங்கள் ஏன் கிளம்பினீர்கள்? சிவகாமி எப்படிச் சிறைப்பட்டாள்? உங்கள் கால் எப்படி ஒடிந்தது? அடியிலிருந்து எல்லாம் விவரமாகச் சொல்லுங்கள்!" என்றார்.

ஆயனரும் அவ்விதமே விவரமாகச் சொன்னார். தட்டுத் தடுமாறியும் முன்னும் பின்னுமாகவும் இடையிடையே விம்மிக்கொண்டும் அலறிக்கொண்டும் சொன்னார்.

மாமல்லர் கேட்டுக் கொண்டிருந்தார். அச்சமயம் உறையிலிருந்து எடுத்த கத்தியை அவர் கையில் வைத்துக்கொண்டிருந்தார். கத்தியின் கூரிய விளிம்பை அவருடைய இடது கை விரல்கள் தடவிக் கொண்டிருந்தன. அவ்வாறு தடவியபோது விரல்களில் சில கீறல்கள் ஏற்பட்டன. அந்தக் கீறல்களில் இரத்தம் கசிந்தது. கசிந்த இரத்தம் சொட்டுச் சொட்டாகத் தரையில் சொட்டி அங்கே ஒரு குட்டையாகத் தேங்கியது.

# ஆகாச வெடி

"மகாத்மாஜியின் சரித்திரப் பிரசித்தி வாய்ந்த வெள்ளாட்டின் வெள்ளாட்டுப் பேனாவைக் காணோம். கண்டுபிடித்துக் கொடுப்பவர்களுக்கு இருநூறு ரூபாய் சன்மானம் தரப்படும்."
—ஒரு செய்தி.

பேசாமல் பேனாவை எடுத்தவரே இந்த சன்மானத்தை வாங்கிக்கொண்டு இருநூறு ரூபாய்க்கு புதுப்பேனா வாங்கிக் கொள்ளலாமே!

★

"வி 2. ஆகாச குண்டுகளைத் தயாரித்த ஜெர்மன் விஞ்ஞானி ஒருவரை யுத்தக் குற்றவாளியாகக் கருதித் தூக்கு தண்டனை விதிக்கப் போகிறார்களாம். அவர் கண்டு பிடித்த குண்டு பூலோகத்தை விட்டு சந்திர லோகத்தை அடையக் கூடுமாம்."
—ஒரு செய்தி.

அவருடைய குண்டு சந்திரலோகத்தை அடையு முன்பே அவர் எமலோகத்தை அடைந்து விடலாம்!

★

"பொள்ளாச்சியில் ஜலக்கஷ்டம் சொல்லி முடியாது. ஒரு பீப்பாய் ஜலம் 14—அணா வரையில் விற்கப்படுகிறது."
—ஒரு செய்தி.

பொள்ளாச்சி வாசிகள் பணத்தைத் தண்ணீராய்ச் செலவழிக்கின்றனர் போலும்!

★

"ஸ்ரீ வி. டி. சவர்க்கார் குளிர் ஜுரத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்."
—ஒரு செய்தி.

ஸிம்லாவின் குளிருக்கும் சவர்க்காரின் குளிர் ஜுரத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்காதென்றே நம்புகிறோம்.

"ராஷ்டிரபதி ஆஸாத் இப்பொழுது உச்சஸ்தானத்தில் இருக்கிறார்."
—ஒரு ஜோசியர்

ஜனாப் ஜின்னாவும் இன்னும் உச்சாணிக் கொம்பிலேதான் இருப்பதாகத் தோன்றுகிறது.

★

"ஜூன் 27உ முதல் தொடர்ந்து இங்கே வானத்தில் ஒரே மப்பும் மந்தாரமுமா யிருக்கிறது."
—ஸிம்லாச் செய்தி

ஸிம்லா மகாநாடு சுபகரமாக முடிந்ததும் குளிர்ந்த மழை வேண்டுமல்லவா?

★

"காங்கிரஸ்காரர்கள் ஆட்சிக்கு வந்ததும் உடனே மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் என்று மகாத்மா காந்திக்கு ஒரு குடிகாரன் கடிதம் எழுதியிருக்கிறான்."
—ஒரு செய்தி.



இதை அவன் சுயபுத்தியுடன் எழுதியிருக்கிறான் என்றே நினைக்கிறோம்.

★

"திருப்பரம் பள்ளிக்கூடம் ஒன்றில் உபாத்தியாயர்கள் மாணவர்களுக்கு க. ம. பிரசாரம் செய்கிறார்கள் என்பதற்காக ஒரு தகப்பனார் தம்முடைய இரண்டு குழந்தைகளையும் மேற்படி பள்ளியிலிருந்து வாபஸ் பெற்று விட்டார்."
—ஒரு செய்தி

அதிகமாக மாணவர்கள் வந்து சேர்ந்து இட நெருக்கடி உண்டு பண்ணாமலிருக்க இன்னும் சில பள்ளிக்கூடங்களும் இதே முறையைக் கையாண்டு பார்க்கலாமே?



தாத்தாவை வேகமாக நடக்க வைப்பதற்காக அவருடைய பேரன் செய்த யுக்தி!

# ஒரு பெரிய சமூகத்தீங்கு எப்படி சீர்ப்படுத்தப் பட்டு வருகிறது..

இரண்டு வருடங்களுக்கு முன்பு ப்ளாக் மார்க்கெட்டுக்களின் கொடுமை வெகு அதிகம். விலைவாசிகள் அளவுகடந்து ஏறின. நல்ல ஸ்திதியில் இருப்பவர்களுக்கும் தம் வருவாயைக்கொண்டு தமக்கு இன்றியமையாத உபயோகப் பொருள்களை வாங்க முடியாதபடி விலைகள் உயர்ந்துவிட்டன. பிறகுதான் சர்க்கார் கட்டுப்பாடுகள் ஏற்பட்டன. அதையொட்டி விலைவாசிகளைக் குறைக்க வேண்டுமென்றும் உணர்ச்சி பொதுமக்களுக்கு நாளுக்கு நாள் பெருகத் தொடங்கியது. அவ்வுணர்ச்சி சித்திபெற்று வருகிறது. எத்தனையோ கொள்ளை இலாபக்காரர்கள் இப்போது சிறைவாசம் செய்கிறார்கள். எவ்வளவோ சரக்குகள் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன. விலைவாசிகள் குறைகின்றன.

## நீங்கள் எப்படி உதவலாம்

எந்த சாமானுக்கும் அனியாய விலைகொடுக்க மறுங்கள். தங்களுடைய தீய செயல்களை விடாப்பிடியாகத் தொடர்ந்து நடத்திவர முயலும் கடைக்காரர்களைப் பற்றி, மிகவும் அருகிலுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்கு தகவல் கொடுங்கள். ஒன்றுகூடி ஒத்துழைத்து அவர்களுடைய அக்கிரம முறைகளை தகர்த்தெறியுங்கள். மற்ற ஆண்களும் பெண்களும் அப்படியே செய்ய வேண்டுமென்று தூண்டுங்கள்—

## ப்ளாக் மார்க்கெட்டுக்கு இடங் கொடாதீர்கள்

அப்போது அது ஒழிந்து விடும்

இந்திய சர்க்கார் தகவல், ஒலிபரப்பு இலாகா வெளியீடு.

KALKI—8-7-1945



# நான்காவது நாள்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

யுத்த நிகழ்ச்சிகள் தினமும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். அடிப்பதும் கொல்லுவதும் தவிர வேறே ஒன்றுமில்லை. கதையில் சுவாரஸ்யம் இருக்காது. ஆயினும் பாரதக் கதையில் யுத்தமே பெரும் நிகழ்ச்சி. அதை விட்டு விட்டால் கதா பாத்திரங்களின் உணர்ச்சி வேகங்களை நாம் சரியாக உணர முடியாது.

பொழுது விடிந்தவுடன் பீஷ்மர் கௌரவ சேனையை மறுபடி அணிவகுத்தார். துரோணர், துரியோதனன் முதலியோரால் சூழப்பட்டு நின்ற பிதாமகர் தேவர்களால் சூழப்பட்ட வஜ்ராயுத பாணியான இந்திரனைப் போல் விளங்கினார். அணி வகுக்கப்பட்ட சேனையானது மகாரதர்களும் யானைகளும் குதிரைகளும் நிறைந்து மேகமும் மின்னலும் இடி முழக்கமும் நிறைந்த மாரிகாலத்து ஆகாயம் போல் விளங்கிற்று. பிதாமகர் சேனையை முன் செல்லக் கட்டளையிட்டார். வானரக் கொடி பறந்த தேரின் மேல் நின்ற அருச்சுனன் பிதாமகருடைய காரியங்களைத் தூரத்தினின்று பார்த்தான். அவனும் ஆயத்தமானான்; யுத்தம் தொடங்கிற்று.

அசுவத்தாமனும் பூரிசிரவசும் சல்யனும் சித்திர சேனனும் சலனுடைய மகனும் ஆகிய ஐவர் அபிமன்யுவைச் சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். ஐந்து யானைகளை ஒரு சிங்கம் எதிர்ப்பதுபோல் அவன் இந்த ஐவரையும் எதிர்த்துப் போர் புரிந்தான். பலர் சூழ்ந்து கொண்டு தன் குமாரனைத் தாக்குவதைப் பார்த்த அருச்சுனன் கோபங் கொண்டு சிம்மநாதம் செய்து மகனுக்கு உதவியாக வந்து சேர்ந்தான். அதன்மேல் போரின் வேகம் இன்னும் அதிகரித்தது. திருஷ்டத்யும்னனும் பெரியதொரு படையுடன் வந்து சேர்ந்தான்.

சலனுடைய மகன் கொல்லப்பட்டபடியால் சலனும் சல்யனும் திருஷ்டத்யும்னனைப் பலமாகத் தாக்கினார்கள். திருஷ்டத்யும்னனுடைய வில்லைச் சல்யன் ஒரு கூரிய பாணத்தை வீசி அறுத்தான். இதைக் கண்ட அபிமன்யு சல்யன்மேல் அம்புகளைப் பொழிந்தான். அபிமன்யுவின் கோபத்தைப் பார்த்துச் சல்யனுக்கு அபாயம் வந்தது என்று துரியோதனனும் அவனுடைய தம்பிகளும் வந்து சல்யனைச் சூழ்ந்து காத்தார்கள். அச்சமயம் பீமசேனனும் வந்து சேர்ந்து விட்டான்.

பீமன் கதாயுதத்தைக் கையில் எடுத்தான். அப்போது தன் தம்பிகள் நடுங்கியதைக் கண்ட துரியோதனனுக்குக் கோபம் உண்டாயிற்று. பெரியதொரு யானைப்படையை பீமன்மேல் செலுத்தினான். யானைகளைக் கண்டதும் பீமன் ரதத்தினின்று இறங்கிக் கையில் ஒரு இரும்பு கதையை எடுத்துக்கொண்டு அந்த மிருகங்களைத் தாக்கினான். அவை வெருண்டு ஒன்றை ஒன்று தாக்க ஆரம்பித்தன. எப்போதுமே யானைப் படைகளின் கதி இதுவென்று நம்முடைய பழைய கதைகளிலும் தெரிகிறது. பாண்டவச் சேனை அந்தச் சமயத்தை உபயோகித்து யானைகள் மீது சரங்களைப் பொழிந்து அவற்றை இன்னும் வெறிகொள்ளச் செய்தார்கள்.

பீமன் யானைக் கூட்டத்தில் பிரவேசித்து அவற்றை வெட்டிக் கொன்றது, பூர்வத்தில் இந்திரன் மலைகளைப் பிளந்து வீழ்த்தியதுபோல் காணப்பட்டது. அந்த மிருகங்கள் பெருங்கணக்கில்

மாண்டு வீழ்ந்து யுத்தகளத்தில் பர்வதங்கள்போலக் கிடந்தன. எஞ்சித் தப்பின யானைகள் இங்குமங்கும் ஓடி கௌரவப் படையையே நாசம் செய்தன. பிறகு துரியோதனனுடைய கட்டளைப்படி எல்லாப் படைகளும் பீமனை எதிர்த்தன. அவனோ மேருவைப் போல் அசைவற்று நின்றான்.

அச்சமயம் பாண்டவ சைன்யத்தில் முக்கியமான வீரர்கள் அவனுக்குச் சகாயமாக வந்து சேர்ந்தார்கள்.

துரியோதனன் எய்த பல பாணங்கள் பீமசேனனுடைய மார்பில் பட்டுத் துன்பப்படுத்தின. பீமசேனன் மறுபடியும் தேரின்மேல் ஏறித் தன் சாரதியான விசோகனைப் பார்த்து, "விசோகனே! இந்த யுத்தகளத்தில் இப்போது என் முன் திருதராஷ்டிர புத்திரர்கள் இவ்வளவு பேரும் வந்து நிற்பது எனக்கு மகிழ்ச்சி தருகிறது. என்னுடைய ஆசையான மரத்தில் பழங்கள் தோன்றியவாறு இவர்கள் இன்று என் கையில் சிக்குவதற்கு இருக்கிறார்கள். குதிரைகளைச் சரியாக இழுத்துப் பிடித்து நடத்து. இவர்களை நான் யமாலயம் அனுப்பப் போகிறேன்" என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டு வில்லை வளைத்துத் துரியோதனன் மேல் பல அம்புகள் செலுத்தினான். துரியோதனனுக்குக் கவசம் இல்லையேல் மாண்டிருப்பான். அன்று பீமன் துரியோதனனுடைய தம்பிகள் எண்மரை வதம் செய்தான். துரியோதனனும் பல பாணங்களினால் பீமனை அடித்தான். பீமன் பிடித்திருந்த வில்லைத் துரியோதனன் ஒரு அம்பைச் செலுத்தி ஒடித்தான். உடனே பீமன் வேறொரு வில்லை எடுத்து அதில் கத்தியைப் போன்ற அம்பைத் தொடுத்துத் துரியோதனனுடைய வில் அறுபட்டுக் கீழே விழுமாறு செய்தான். துரியோதனனும் வேறொரு வில்லை எடுத்துக் கோரமான ஒரு பாணத்தைத் தொடுத்து நன்றாகக் குறி பார்த்துப் பீமனை கடுமையாய் அடித்தான். அதன் வேகத்தால் பீமன் மூர்ச்சையடைந்து உட்கார்ந்தான்.

இதைப் பார்த்த பாண்டவ வீரர்களான அபிமன்யு முதலானவர்கள் துரியோதனன்மேல் சரமாரி பொழிந்தார்கள். தகப்பனாரின் நிலைமையைக் கண்டு கடோத்கசனுக்குக் கோபம் மேலிட்டுப் பெரும் போர் துவக்கினான். அந்தப் போரைக் கௌரவப் படையினால் தாங்க முடியவில்லை.

அதைப் பார்த்துப் பீஷ்மர், "இந்த அரக்கனோடு இன்று நாம் யுத்தம் செய்ய முடியாது. நம்முடைய சேனை களைத்துப்போயிருக்கிறது. அஸ்தமன காலமும் ஆயிற்று. இவனுக்கோ இருட்டே பலம் தரும். நாளைய தினம் பார்ப்போம்" என்று துரோணருக்குச் சொல்லி விட்டுச் சேனையைத் திருப்பினார். பாண்டவர்களும் வெற்றி கோஷங்கள் செய்து கொண்டு திரும்பினார்கள். துரியோதனன் தன் சகோதரர்கள் பலரை இழந்து துக்கத்தால் பீடிக்கப் பட்டுக் கண்களில் நீர் ததும்பப் பாசறையில் உட்கார்ந்து ஆழ்ந்து சிந்திக்கலானான்.

* * *

போரில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் சஞ்சயன் சொல்லிக் கேட்டுக் கொண்டிருந்த திருதராஷ்டிரன், "அப்பா, சஞ்சயா! எங்களைச் சேர்ந்தவர்கள் கொல்லப் பட்டார்கள், துன்பப் பட்டார்கள் என்றே எப்போதும் சொல்லி வருகிறாயே! எனக்கு மிகவும் துக்கம் உண்டாகிறது. எந்த உபாயம் செய்து நம்மவர்கள் ஜயிக்கப் போகிறார்கள்? எனக்குத் தாங்கமுடியாத பயமாக இருக்கிறது. முயற்சியைக் காட்டிலும் விதியே பெரிது போலிருக்கிறது" என்றான். அதைக் கேட்ட சஞ்சயன் "அரசனே! இந்த அபாயம் உம்முடைய காரியமே அல்லவா? மனக் கலக்கமடையாமல் உறுதியான மனத்துடன் நிகழ்ச்சிகளைக் கேட்க வேண்டும்" என்றான்.

"விதுரனுடைய வாக்கியங்கள் நிச்சயமாகி வருகின்றன" என்று திருதராஷ்டிர மகாராஜன் சொல்லிப் பெருந் துயரத்தில் மூழ்கினான்.

---



கீழ்வரும் சம்பவம் லண்டன் ஓட்டல் ஒன்றில் நடந்ததாம் :—

ஓட்டல் அறை ஒன்றுக்குள் ஒருவர் நுழைந்தார். அங்கே, ஒரு கிழவர் ஒரு நாயுடன் 'செஸ்' (Chess) என்ற சதுரங்க விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தார்.

உள்ளே நுழைந்த ஆசாமி, "நாய் எங்கேயாவது 'செஸ்' விளையாடுமா? இது ஆச்சரியமாயிருக்கிறதே!" என்று கேட்டார். பிறகு நாய் விளையாடுவதைச் சிறிது நேரம் கூர்ந்து கவனித்தார். நாய், காய்களை இப்படியும் அப்படியும் நகர்த்திக் கொண்டிருந்தது.

வந்தவர் கண்களை அகல விரித்து "ஆச்சரியம், ஆச்சரியம்!" என்றார்.

கிழவர், "இது என்ன ஆச்சரியம்? இந்த ஆட்டத்தில் ஒரு தடவை தான் இந்த நாயைக்கூட ஜயித்திருக்கிறேனே!" என்றார்.

# ப்ளாண்டர்ஸ்

## நீலகிரி தேயிலை






பிரபலமானதும், ருசி யுள்ளதும், கரு கருப்பு அளிக்கக் கூடியதுமான ப்ளாண்டர்ஸ் காங்கோ, பாமலி மிக்சர், ரகங்கள் தினம் அதிக பிரபலமடைந்து வருகின்றன. உங்களுக்கு சிக்கனமும், உயர் ரகமும் சேர்ந்து இருக்க வேண்டுமானால் இந்த இரண்டு பிரபல ரகங்களை விட வேறு கிடையாது. ஏனெனில் அவைகள் தான் இந்திய உபயோகத்துக்கான மக்கள். இன்றே இந்த உயர்தரமான ரகங்களை தெரிந்துகொள்ளுங்கள்.

**ஸ்ரீ ப்ளாண்டர்ஸ் கம்பெனி லிட்.,**

கூனூர், நீலகிரி, தென் இந்தியா.

PK-15.T.M.

# வாழ்க்கையும் கற்பனையும்

பி. எஸ். சேஷாத்ரி

★

ராமச்சந்திரன் எங்கள் ஆபீசுக்கு வெளியூரிலிருந்து மாற்றலாகி வந்தவர். அவரை முதன் முதலில் பார்த்தபோதே எனக்குப் பிடித்துவிட்டது. எப்போதும் சிரிப்பும் கேலியுமாய் எல்லாருடனும் கலகலப்பாகப் பழகும் ஸ்வபாவம். நானும் சிடுமூஞ்சியில்லை; எங்களுக்குள் பரஸ்பரம் அந்நியோன்னியம் வளர்ந்ததில் அதிசயமொன்றுமில்லை.

ஆபீஸ் விட்டவுடன் இருவரும் ஒன்றாகத்தான் கிளம்புவோம். ஊரின் வெவ்வேறு பாகங்களில் குடியிருந்ததால் 'டிராக்கு' ரோட்டு வரையில் சேர்ந்து போவோம். இருவரும் பேச்சுக்குச் சளைத்தவர்களல்லவாதலால் வழிநெடுக ஓயாமல் பேசிக்கொண்டு போவோம். ஊருக்குப் புதிதாகையால், அநேக விஷயங்களில் ராமச்சந்திரன் என்னுடைய ஆலோசனையைக் கேட்பார்.

"இந்த ஊரில் நல்ல எம்ப்ராய்டரி நூல் கிடைக்குமா? 'இன்றைக்கு எப்படியாவது வாங்கிக் கொண்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டு வந்தேன்" என்று ஆரம்பித்தார் ஒரு நாள்.

"எனக்குத் தெரியாது. என் மனைவியைக் கேட்டுத்தான் சொல்லவேண்டும். நாளைக்கு வேண்டுமானால் விசாரித்துக் கொண்டு வந்து சொல்கிறேன்" என்றேன்.

"சரியாய்ப் போச்சு! இப்போதே வேண்டும் என்றால் நாளைக்கு என்கிறீர்களே! சரி; இன்றைக்கு நூல் இல்லாமல் வெறுங்கையோடு வீட்டிற்குப் போனால், என் மனைவி என்னை 'பெஞ்சியின் மேல் ஏறு!' என்று சொல்லாமலிருக்க வேண்டுமே என்றுதான் கவலை; என் பெண்டாட்டி ஹெட்மாஸ்டர் பெண்ணாக்கும்!" என்றார்.

"நீங்களும், உங்கள் மனைவியும் எங்கள் வீட்டிற்கு நாளைக்கு விஜயம் செய்யவேண்டியது. நம் மனைவிகளைச் சிநேகம் பண்ணி வைத்தாற் போலுமாச்சு, உங்கள் மனைவிக்கு வேண்டிய 'எம்ப்ராய்டரி' நூலும் கிடைத்துவிடுகிறது. பினான் எப்படி?"

"ரொம்ப சரி. புது ஊரில் மனுஷர்கள் நாலு பேர் தெரிந்திருந்தால் நல்லதுதான்!"

"இந்த ஊர் உங்கள் மனைவிக்குப் பிடித்திருக்கிறதோ?"

"ஆமாம், அவளைக் கேட்டால் சொர்க்கம்கூடச் சாலைப்பட்டிக்கு ஈடாகாது என்பாள். என்ன இருந்தாலும் பெண்களுக்குப் பிறந்த வீடு சம்பந்தப்பட்ட எதுவுமே ஒரு அலாதி வாஞ்சை" என்றதும் எனக்கு என்னவோ போலாய் விட்டது.

அவர் சொன்ன ஒரு சங்கதி என் மனத்திலே துன்ப அலைகளைக் கிளப்பி விட்டது. நான் பேசாமல் நடந்து கொண்டிருந்தேன். அவரும் மௌனமாக வந்து கொண்டிருந்தார்.

"நாளைக்குச் சாயங்காலம் நானும் என் மனைவியும் கட்டாயம் வருவோம். நீங்கள் பாட்டில் கதவைப் பூட்டிக்கொண்டு எங்காவது போய்விடப் போகிறீர்கள்!"

"கட்டாயம் வாருங்கள். நாங்களும் உங்களை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்போம்" என்று சொல்லி ஒருவிதமாக விடைபெற்றுக் கொண்டேன்.

"நான் ஆவலோடு எதிர்பார்ப்பேன்" என்று சொன்னது எவ்வளவு தப்பட்டமான பொய்? என் நண்பன் மணந்திருப்பது சாலைப்பட்டி ஹெட்மாஸ்டர் பெண் என்று தெரிந்த பிறகு, என் நினைவுப் பாதை பின்னோக்கி ஓடியது. சென்றகால நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாக என் மன அரங்கில் தோன்ற ஆரம்பித்தன.

• • •

அப்பொழுது நான் இண்டர்மீடியட் இரண்டாவது வகுப்பில் படித்துக்கொண்டிருந்தேன். 'தசரா' விடுமுறைக்குத் தன்னோடு வந்து தங்கும்படி என் ஒன்றுவிட்ட தமையனார் வெகுநாளாய் எழுதியிருந்தார். அவருடைய ஒரே பெண் பேபி அந்த வருஷம் முதன் முதலாகக் கொலு வைக்கப் போவதைப் பற்றியும் பிரஸ்தாபித்திருந்தார். அண்ணாவுக்கும் கூடப் பிறந்த சகோதரர்கள் இல்லை. என்னைத் தன் சொந்தத் தம்பியாகவே நினைப்பவர். மன்னியும் பெரிய இடத்துப் பெண். என்மீது நல்ல வாஞ்சை. பேபிக்கும் என்னைக் கண்டுவிட்டால் 'சித்தப்பா, சித்தப்பா!' என்று

தலைகால் தெரியாது. விடுமுறை ஆரம்பித்ததும் நான் பேபிக்குச் சில துணிமணிகளும் இரண்டு மூன்று பொம்மைகளும் வாங்கிக் கொண்டு கொலுவுக்கு இரண்டு நாள் முன்னதாகவே சாலைப்பட்டிக்குப் போய்ச் சேர்ந்து விட்டேன்.

கொலுவுக்கு முதல் நாள் சாயங்காலம்; அண்ணா ஆபீஸிலிருந்து வர நேரமாகுமாதலால் நான் மட்டும் உள்ளே பலகாரம் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். வரவழைப்பதற்காகப் பெண்கள் வரத் தொடங்கிவிட்டனர்.

"அம்மா! எதிராத்துப் பத்மா வந்துட்டா!" என்று பேபி கட்டியங்கூற ஒரு பெண் சமையலறைக்குள் நுழைந்தவள், தனக்குப் பரிச்சயமில்லாத ஒரு புது மனிதன் அங்கிருப்பதைப் பார்த்து விட்டுக் கால்கள் பின்னுக் கிழுக்க நடையிலேயே தங்கிவிட்டாள்.

"என்னடி பத்மா! உள்ளே வரக் கூடாதா, என்ன? வேறு யாருமில்லை. பேபியினுடைய சித்தப்பாதான். பட்டணத்திலே யிருந்து வந்திருக்கிறார்" என்று என்னைப் பற்றி அந்தப் பெண்ணிடம் பேசிக்கொண்டே குங்குமம் எடுத்துக் கொண்டாள் மன்னி.

நானும் தலையைத் தூக்கி அந்தப் 'பத்மா'வைப் பார்த்தேன்.

பத்மாவோடு சேர்ந்து போவதற்கு பேபியும் டிரஸ் பண்ணிக்கொண்டு தயாராய் இருந்தாள். பேபி போட்டுக் கொண்டிருந்த 'ப்ளவுஸ்'ஸின் மீது அந்தப் பெண்ணின் கவனம் சென்றது.

"இந்த 'ப்ளவுஸ்' எங்கே வாங்கினீர்கள்?" என்றாள்.

"நாளைக்கே உனக்கும் பட்டணத்து ஆம்படையானா ஒருத்தன் வந்து விடுவான். இதுக்கெல்லாம் என்ன குறைச்சல்? அதுவும் இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்குச் சொல்லியே கொடுக்க வேண்டாம். தலையிலே தூக்கிக் கொண்டு கூத்தாடுவார்கள்!" என்று சொல்லிக் கொண்டே மன்னி என் பக்கம் பார்த்தாள். அந்தப் பெண்ணும் நான் இதையெல்லாம் கவனிக்கிறேனா என்று அறிய எனக்காகப் பார்வையைச் செலுத்தினாள். நான்தான் அவள்மேல் வைத்த விழியை எடுக்கவே யில்லையே! பாவம், அவளுக்கு வெட்கமாய்ப் போய்விட்டது. "போங்க மாமி! உங்களுக்கு எப்பவும் பரிகாசம்தான்!" என்று ஸ்வாதீனமாகக் கடிந்துகொண்டு, பேபியை அழைத்துக் கொண்டு ஓடிவிட்டாள்.

"எதிராத்துப் பெண்ணுக்கு இன்னும் பதினைந்து வயது ஆகவில்லை. மூக்கும் முழியுமாய் எப்படி யிருக்கிறாள்! ரொம்ப சமர்த்து, அடக்க ஒடுக்கம். இந்த வருஷம் எப்படியாவது கல்யாணம் பண்ணிவிட வேண்டும் என்று இருக்கிறார்கள். அவா அப்பா இந்த ஊர் போர்டு ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர். சுமாராய்த்தான் கல்யாணம் செய்து கொடுப்பார்கள். கையில் ரொக்கம், யானை, குதிரை இதெல்லாம் கேட்டால் முடியாது. பெண்ணுக்காகவே பண்ணிக் கொள்ளலாம்" என்று யாரோ கேட்ட மாதிரி ஒரே மூச்சில், விஷயங்களை லாகவமாக அடுக்கிக்கொண்டு போனாள் மன்னி.

அப்பா! இந்த ஸ்திரீகள்தான் எவ்வளவு பொல்லாதவர்கள்! நம்மை எவ்வளவு சுலபத்தில் அறிந்து கொண்டு விடுகிறார்கள்!



மறைப்பானேன்? அந்தப் பெண்ணைப் பார்த்ததிலிருந்து என் மனத்தில் ஒரு கிளர்ச்சி ஏற்பட்டிருந்தது என்னவோ வாஸ்தவம்தான். 'மூக்கும் முழியுமாய்' என்று மன்னி அவளைப்பற்றிச் சொன்னது ரொம்ப சாதாரணம். தங்கத் தகடு போன்ற நெற்றி, உருட்டி உருட்டி விழிக்கும் விசாலமான கண்கள், எடுப்பான மூக்கு, சதை கொழிக்கும் ரோஜா கன்னங்கள், தலை நிறைய மயிர், களை சொட்டும் முகம் — அவள் அழகிதான். வலது கையில் குங்குமச் சிமிழை ஏந்தி இடது கையால் ஒட்டியாணத்தைத் தளர்த்திக்கொண்டு, மாலை வெய்யிலில் அவள் நின்று கொண்டிருந்த காட்சி, ஸ்வர்ண விக்கிரகத்தையும், சௌந்தரிய தேவதையையும் நினைப்பூட்டுவதா யிருந்தது.

அவளும் என்னிடத்தில் அக்கறை காட்டியதாக ஸ்பஷ்டமாகத் தெரிந்தது.




"என் ஸார்! பஸ்ஸுக்கு ரொம்ப நாழியாய்க் காத்துக்கொண்டிருக்கிறீர்களோ?"

ஏதாவது சாக்கு வைத்துக் கொண்டு எங்கள் வீட்டிற்கு, ஒரு நாளைக்கு இத்தனை தரம்தான் வருவாள் என்று சொல்லி முடியாது.

ஒரு நாள் மத்தியானம் நான் தனியாகக் கூடத்தில் ஈஸிச் சேரில் உட்கார்ந்து கொண்டு ஏதோ படித்துக் கொண்டிருந்தேன். பேபி பள்ளிக்கூடம் போயிருந்தாள். மன்னி பின்கட்டில் காரியமாயிருந்தாள். எங்கள் வீட்டிலிருந்து கொண்டுபோன பேப்பரைத் திருப்பிக் கொடுக்கப் பத்மா வந்தாள். நான் மட்டும் தனியாக இருக்கவே எட்ட நின்று, தயங்கித் தயங்கிப் பேப்பரை என் பக்கமாக நீட்டினாள். அவளோடு தனிமையில் விடப்பட்ட எனக்கு ஏதோ இன்ப ஜ்வரம் வந்தாற்போலிருந்தது. என்னுடைய தைரியத்தை யெல்லாம் திரட்டிக்கொண்டு, அவளது நீட்டிய கரத்தைப்பற்றி என் பக்கமாக இழுத்தேன்.

ஏக காலத்தில் தோன்றிய நாணமும் அச்சமும் அவள் முகத்திற்கு ஒரு புது அழகையே கொடுத்தன.

"நான், வந்து, உன்னைத்தான்........." என்று மீதியை அவள் கற்பனைக்கே விட்டு விட்டேன்.

அவள் குனிந்த தலையைச் சற்றே நிமிர்த்தி, ஒரு சிறு புன்னகையுடன் திரும்பவும் கவிழ்த்துக் கொண்டாள். அவள் தன்னுடைய சம்மதத்தைத் தெரிவிக்க 'ஓவ்' பாஷையைக் கையாளவில்லை.

"என்னை வீட்டிலே தேடுவா. போயிட்டு வரேன்!" என்று கெஞ்சினாள்.

கையை விட்டுவிட்டேன். கால்கள் பின்னவிட அவள் ஓட எத்தனிக்கையில் சாட்டை போன்ற அவள் பின்னலின் நுனியைப் பற்றினேன். அதில் முடிந்திருந்த ரிப்பன் கையோடு கொத்தாய் வந்து விட்டது.

அவள் ஓடியே விட்டாள்!

அந்த நீல ரிப்பன்! என் வாழ்க்கையின் ஆரம்பத்தில் மலரவேண்டிய காதலின் சின்னம்! பத்மா எனக் களித்த முதற் பரிசு! அதைப் பத்திரமாகச் சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்டேன்.

அரை மணி நேரங்கூட ஆகியிருக்காது. நான் கற்பனைக் கடலில் நீந்தி விளையாடிக் கொண்டிருந்தேன். பத்மா திரும்பவும் எங்கள் வீட்டிற்கு அடிமேலடி வைத்துக்கொண்டு மெதுவாக நடந்து வந்தாள். என் மன்னியைக் கேட்டுச் சல்லடை வாங்கிப் போக வந்ததாகச் சாக்கு.

"பத்மா! நான் சரஸ்வதி பூஜை கழிந்த மறு நாள், ஊருக்குப் போகவேண்டும். போனதும் என்னை மறந்துவிட மாட்டாயே?"

"இன்னும் இரண்டு நாளிலேயா?" என்றாள். அவள் முகத்தில் கவலையின் குறிகள் லேசாகப் படர்ந்தது. "திரும்பவும் வருவீர்களோல்லியோ? பேபி அப்பாவுக்குக் கடுதாசி போடுவீர்களோல்லியோ?" என்று திருத்தி திருத்தி மெதுவாகக் கேட்டாள்.

"மார்கழி மாதம் லீவுக்குக் கட்டாயம் வருவேன். அதற்கடுத்த லீவு என்ன தெரியுமா? பத்மா, இதோ பார்......"

இதற்குள் ரேழியில் காலடிச் சத்தம் கேட்டது. காய்கறிக்காரி 'அம்மா!' என்று கூப்பிட்டதற்கு மன்னி பின் கட்டிலிருந்து பதில் கொடுத்தாள்.

பத்மா ஓடிவிட்டாள்.

அன்று சாயங்காலம். எதிர்த்த வீட்டு ஹெட்மாஸ்டரை - பத்மாவின் தகப்பனாரை - நானும் அண்ணாவும் கிளப்பில் சந்தித்தது வெறும் தற்செயலல்ல, தெய்வ சங்கல்பம் என்றுதான் எண்ணினேன். ஊருக்குப் போவதற்கு முன் அவர்கள் வீட்டுக்கு என்னை ஒருதரமாவது வந்து போகும்படி அழைத்தார். என்னைக் கூட்டி வரும்படி

அண்ணாவிடமும் சொன்னார். மறுநாள் சாயங்காலம் வருவதாக ஒப்புக் கொண்டோம். எனக்கு உள்ளூறப் பெருமை என்று சொல்லவும் வேண்டுமோ?

இரவு வீட்டுக்கு வந்ததும் அண்ணா மன்னியிடம், "எதிர்த்த ஹெட்-மாஸ்டர் நம்ம பையன்மேல் கண் வைத்து விட்டார். பயலை நாளைக்கு வீட்டுக்கு வரும்படி சொல்லியிருக்கிறார்" என்று பரிகாசம் பண்ணினார்.

மறு நாள் நானும் அண்ணாவும் அவர்கள் வீட்டிற்குப் போனோம். மன்னி, அண்ணா கேலி செய்யப் போகிறார்களே என்றுகூட எனக்குத் தோன்றவில்லை. ஏதோ என்னால் முடிந்தவரை என்னை 'அழகு' பண்ணிக் கொண்டுதான் சென்றேன்.

நாங்கள் மூவரும் வாசற்புறத்து உள்ளில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம். பத்மா பலகாரமும் காப்பியும் கொண்டு வந்து வைத்துவிட்டு உடனே திரும்பிப் போய் விட்டாள். திரும்பவும் அவள் எங்கேயாவது தென்படுகிறாளா என்று என் விழிகள் மட்டும் அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தன. அப்போது என் முகத்தில் கட்டாயம் அசடு வழிந்திருக்கும்.

உள்ளேயிருந்து அவள் பாட்டுக் குரல் கேட்டது. கொலுவுக்கு முன் உட்கார்ந்து பாடுகிறாள் போலிருக்கிறது. அவள் குரல் பாட்டிற்கேற்றதல்ல. பாடிய முறையும் சுமார் என்றுதான் சொல்லவேண்டும். அவள் பாடவேண்டிய அவசியம் என்ன? சதங்கை ஒலி போன்ற சிரிப்பையும், கனிசொன்ற பேச்சையும் கேட்பதில் சலிப்பா ஏற்படப் போகிறது?

அண்ணாவும் அவரும் என்னென்னவோ பேசிக்கொண்டிருந்தார்கள். என் வரையில் சிந்தனையைப் பறக்கவிட்டுக் கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தேன். விடை பெற்றுக் கொள்வதற்கு முன், தமக்கு என்னைப் பிடித்திருப்பதாகவும், சாதாரணமாய் இந்தக் காலத்து இளைஞர்களைத் தமக்கு அவ்வளவாகப் பிடிப்பதில்லையென்றும் தம்முடைய மனமான அபிப்ராயத்தைத் தெரிவித்தார் ஹெட்மாஸ்டர்.

ஊருக்குக் கிளம்பவேண்டிய தினமும் வந்து விட்டது.

நானும் அந்தப் பக்கம் பார்த்தேன். பத்மாவைக் காணவில்லை. வண்டி புறப்பட்டு விட்டது.

இரண்டு வீடுகள் தாண்டினதும்தான் பத்மாவை ஏன் காணவில்லை என்று தெரிந்தது. அவள் மாடி அறையின் ஜன்னல் வழியாகப் பார்த்துக்கொண்டிருந்தாள். வண்டியைக் கண்டதும், தன் இளங்கையை ஜன்னல் கம்பிகளுக்கிடையே நீட்டி, மெதுவும் வேகமாக ஆட்டி எனக்கு விடை கொடுத்தாள்.

மூலை திரும்பும் வரையில் நானும் அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

இது எனக்கு விளங்காத ஒரு புதிராகத் தோன்றியது. இருபது நாட்களுக்கு முன் அவள் யாரோ, நான் யாரோ! இப்போது கூட நாலு வார்த்தை பேசின தோஷம்தான். என் வாழ்க்கை, இன்ப துன்பங்களை எவ்வளவு தூரம் பாதிக்க வந்துவிட்டாள்! எங்களுக்குள் இந்தப் பரஸ்பர உணர்ச்சி எப்படி இவ்வளவு தூரம் வளர்ந்து வேரூன்றி விட்டது!

கிறிஸ்துமஸ் லீவுக்குச் சாலைப்பட்டிக்குப் போக முடியவில்லை. சில அவசரக் காரியங்கள் நிமித்தம் நான் எங்கள் ஊருக்கே போய் விட்டேன். பாவம், பத்மா என்னை எதிர்பார்த்து ஏமாந்திருப்பாள்.

பரீட்சைக்கு நாள் நெருங்க ஆரம்பித்தது. என் தமையனிடத்திலிருந்து வந்த ஒரு கடிதத்தில் அவரை வடக்கே எங்கேயோ மாற்றி விட்டதாக எழுதியிருந்தார். என்னையும் பத்மாவையும் பிணைத்திருந்த மெல்லிய



முதல்வர்:—இவர்தான் என் மாப்பிள்ளை. டாக்டர் பரீட்சைக்குப் போய்விட்டு வருகிறார்.

நண்பர்:—ஐயோ பாவம்! மாப்பிள்ளைக்கு என்ன உடம்பு? டாக்டர் என்ன சொன்னார்? ஏதாவது மருந்து கொடுத்தாரா?

முதல்வர்:—அட பாவமே! இவருக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை ஐயா! டாக்டருக்காகப் படித்துவிட்டுப் பரீட்சைக்குப் போய்விட்டு வருகிறார்!

பட்டுக் கயிறு அறுந்து விட்டதோ என்று நினைத்தபோது உடம்பு சிலிர்த்தது.

போதாததற்கு என் தகப்பனாரிடமிருந்து வந்த கடிதம் வேறு இதை ஊர்ஜிதப் படுத்தியது. பரீட்சை முடிந்ததும் நேரே ஊருக்கு வரும்படி எழுதியிருந்தார். அது மட்டுமல்ல. எனக்கு எங்கேயோ பெண் பார்த்து வைத்திருப்பதாகச் செய்தி கண்டிருந்தது. "பெண் பார்ப்பதற்கு லக்ஷணமாய் இருக்கிறாள். சொத்துள்ள இடம். உன் மேல் படிப்புக்கும் ஒத்தாசையாய் இருக்கும். நம் குடும்ப நிலையில் உன்னை இவ்வளவு தூரம் படிக்க வைத்ததே எவ்வளவு பிரயாசையான விஷயம் என்று உனக்குத் தெரியாததல்ல. இந்த இடம் எங்களுக்கெல்லாம் பிடித்திருக்கிறது. ஜாதகமும் பொருந்தி எல்லாம் சரியாயிருக்கிறது. நீயும் சம்மதிப்பாய் என்றுதான் நினைக்கிறேன்" என்று வெகு நாஸூக்காகப் பிரஸ்தாபித்திருந்தார்.

எல்லாம்தான் இவர்கள் ஏற்பாடு பண்ணி விட்டார்களே? இதில் என்னைக் கேட்க வேண்டியதென்ன இருக்கிறது?

வளர்த்துவானேன்? எனக்கு அந்த வருஷமே கல்யாணம் ஆகிவிட்டது. பெரியவர்களால் பார்த்து நிச்சயிக்கப்பட்ட சௌபாக்கியவதி ராஜலக்ஷ்மியுடன் என் வாழ்க்கை பிணைக்கப்பட்டு விட்டது.

நமக்கு இஷ்டமோ இல்லையோ, காலம் நமக்காக அதன் போக்கைச் சிறிதும் மாற்றிக் கொள்வதில்லை. நான் பி. ஏ. படித்து முடித்த பிறகு மாமனார் சிபார்சின்பேரில் ஒரு உத்தியோகத்தையும் சம்பாதித்துக் கொண்டேன். நானும் ராஜியும் தனியாக வாழ்க்கைப் பிரயாணத்தை நடத்த ஆரம்பித்துவிட்டோம்.

ராஜியைப் பற்றி என்னுடைய உணர்ச்சிகள் பலதிறப் பட்டனவாயிருந்தன. இவள் குறுக்கிடாமலிருந்தால் ஒருகால் பத்மாவை நான் மணந்திருக்கலாமோ என்று நினைக்கும்போதெல்லாம் ஒரே வெறுப்பாயிருக்கும். பிறகு நானே என்னைத் திருத்திக் கொள்வேன். பாவம், இவளும் நம்மை நம்பினவள்தானே? இவள் மட்டில் எதில் தாழ்வு? பத்மா மட்டும் என் வாழ்க்கையில் குறுக்கிடாமலிருந்தால் ராஜியோடு நான் ஒரு புது உலகையே சிருஷ்டித்துக்கொண்டிருக்கலாம்! யார் கண்டது?

அவ்வப்போது, பெட்டிக்கடியில் ஜாக்கிரதையாய் மடித்து வைத்திருக்கும் அந்த நீல சீப்பினை எடுத்துப் பார்த்துப் பெருமூச்செறிவேன்.

பத்மா! அவள் இப்போது எங்கிருக்கிறாளோ? என்னைப் பற்றி என்ன நினைக்கிறாளோ? அவளுக்கேற்ற ஒரு நல்ல கணவன் கிடைத்திருக்க வேண்டுமே! என்ன அசட்டு எண்ணம்! நம்மை விட்டால் அவளுக்கு வேறு நல்ல கணவன் கிடையாதா? எல்லாம் அவளுக்கு ஏற்ற இடம் கிடைத்திருக்கும். அந்தப் பாக்கியசாலி யாரோ? இந்தமாதிரி ஏதாவது எண்ணமிட்டுக் கொண்டிருப்பேன்.

நிறையத் தாமரைகள் மலர்ந்த தடாகத்தில் தேனைக் குடித்துவிட்டு ஒரு வண்டு ஒரே தாமரையைச் சுற்றிச் சுற்றி வருகிறது. திடீரென்று ஒரு மாயக் கை அந்த மலரை ஜலத்துக்குள் இழுத்து விடுகிறது. வண்டு அந்தத் தாமரை இருந்த இடத்தையாவது சுற்றிச் சுற்றி வருகிறதே தவிர பக்கத்தில் தலைதூக்கி, கம்பீரமாக மலர்ந்திருக்கும் மற்றத் தாமரைகளைக் கண்ணெடுத்தும் பார்க்கிறதில்லை. இது என்ன மயக்கம்!

பழைய நினைவுகளை மறக்க முயற்சிக்கும் நிலையில்தான், என் நண்பன் ராமச்சந்திரன் மனைவி பத்மா என்று தெரிந்தது. சாலைப்பட்டி ஹெட்மாஸ்டர் பெண்; வேறு யாராய் இருக்க முடியும்?

ராமச்சந்திரன் மறுநாள் அவளை அழைத்துக்கொண்டு வந்துவிடுவானே என்று ஏக்கம் என்னைப் பீடிக்கத் தொடங்கியது. 'நம்ப வைத்துத் துரோகம் செய்த பாவி' என்று என்னை நினைப்பாளே, அவளை நேருக்கு நேர் எப்படி நோக்குவது? காதலைப் பொழிந்த அக்கருவிழிகள் இப்போது கோபத்தையன்றோ கக்கும்! அல்லது வாழ்க்கையில் ஏற்பட்ட எதிர்பாராத அதிர்ச்சியால் மனமுடைந்து, ஏக்கத்தை வெளியிடும் கண்களா அவைகள்!

• • •

ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் ஆக ஆக என் மனம் நிலைகொள்ளாமல் தத்தளித்தது. பத்மாவைப் பார்க்க வேண்டுமென்று ஆவல், அவள் முகத்தை ஏறிட்டு நோக்க முடியாத பயம், வெட்கம் இவைகள் மாறி மாறி வந்து கொண்டிருந்தன.

ராமச்சந்திரன் வந்தான். அவனோடு வந்தது சாக்ஷாத் 'அவளே'தான். அந்தச் சிரிப்புத் ததும்பும் முகத்தில் ஒரு அழுத்தமும் கண்டிப்பும் படிந்திருந்தன. அவளது பரந்த கண்களில் வாழ்க்கையில் நான் கண்ட ஒரு

அமோக திருப்திதான் பிரதிபலித்தது. அவள் என்னை யார் என்று தெரிந்து கொண்டு, பிறகு கவனியாதது போல இருந்து விட்டாள்.

ராஜி, அவளை உள்ளே அழைத்துச் சென்று விட்டாள். ஏதோ ரொம்ப நாள் பழகியவர்கள் போல இருவரும் பேச ஆரம்பித்து விட்டார்கள்.

நாங்களும் ஏதோ பேசிக் கொண்டிருந் தோம். எனக்கு எல்லாம் சொப்பனம்போல் இருந்தது.

பேச்சுவாக்கில் ராமச்சந்திரன், "இன்னும் இரண்டு மாதங்களில் ஓட்டலில் சாப்பிட வேண்டுமே என்று நினைத்தால் இப்போதே பயமாயிருக்கிறது" என்றார்.

"ஏன், மனைவியை இதற்குள் ஊருக்கு அனுப்பி விடுகிறீர்களா? என்ன அவசரம்?" என்றேன்.

அவர் பல்லை இளித்துக் கொண்டே "இல்லை, ஸார்! அவள் ஸ்நானம் பண்ணாம லிருக்கிறாள். பூச்சூட்ட அழைத்துக் கொண்டு போகிறார்கள்!" என்று சொன் னார். அவருடைய பேச்சில் ஒரு குறை யும், கர்வமும் தொனித்தன.

நாங்கள் பேசிக்கொண்டிருந்தது உள்ளே பெண்கள் காதில் விழுந்திருக்க வேண்டும்.

"என்ன, நமக்குப் போக நேரமாகலையா? பால்காரன் வந்து விட்டுப் போய்விடு வானே!" என்று மெல்லிய குரலில் ஸ்ரீமதி ராமச்சந்திரன் சொன்னாள்.

அவள் சொன்ன மாதிரி, அவள் கவலை பால்காரனைப் பற்றியல்ல என்று நன்றாகத் தெரிந்தது. தன் கணவன் 'அப்பாவி' மாதிரி பேசிக்கொண்டு போவதைத்தான் செல்ல மாகக் கண்டித்தாள். "ஐயோ! இந்த புருஷாளுக்குத்தான் வெட்கம், கிட்கம் ஒன்றும் கிடையாதா? எதை வேண்டுமானா லும் யாரோடு பார்த்தாலும் பேசிவிடுகிறார் களே!" என்று நினைத்துத்தான் அவள் எங்கள் பேச்சில் இடை மறித்திருக்க வேண்டும்.

வாஸ்தவம்தான். அவளுக்கு இப்போது நான் அன்னியன்தானே!

"நேரமாயிற்று!" என்று ராமச்சந்திரன் எழுப்பினார். அவர் மனைவியும் வெளியே வந்தாள். ராஜி தட்டில் வெற்றிலை, பாக்கு, பழம் இவைகளை வைத்து, குங்குமம் கொடுத்தாள்.

குங்குமச் சிமிழோடேதானே அவளை நான் முதன் முதலாகப் பார்த்தது? அவளுக்கும் என்ன தோன்றிற்றோ, ஒரு கணம் என் பக்கம் பார்த்தாள்.

"எனக்கும் நல்ல கணவன் கிடைத்து விட்டார். உனக்கும் ஏற்ற மனைவிதான். நாம் எப்போதோ சந்தித்தோமே, அதை மறந்துவிடு. அது வாழ்க்கையில் ஏற்படும் சர்வ சாதாரணமான விளையாட்டு!" என்று எனக்குப் புத்தி புகட்டின அந்தப் பேசும் கண்கள்.

"எங்கள் வீட்டிற்கு ஒரு நாள் அவசியம் வர வேண்டும்" என்று ராஜியிடம் சொல்லி விடை பெற்றுக் கொண்டாள் பத்மா.

அவர்கள் சென்று விட்டார்கள். நான் நினைத்ததற்கும் கண்டதற்கும் எவ்வளவு வித்தியாசம்! வாழ்க்கையில் தவிர்க்க முடியாத நிகழ்ச்சிகளைச் சந்தோஷமாக ஏற்றுக்கொள்ளும் இந்தச் சகஜ மனப் பான்மை ஒரு சிறு பெண்ணிடம் எப்படி அமைந்து விட்டது! என் கண்களும் திறந்தன.

என் பெட்டியைத் திறந்து அந்த சீப்பை எடுத்தேன். கடையிலே விற்கும் எந்த சீப்புக்கும் இதற்கும் ஏதும் வித்தி யாச மிருப்பதாக எனக்குத் தோன்ற வில்லை. அதை ஜன்னலுக்கு வெளியே எறிந்தேன். அது நூல் அறுந்த காற்றாடி போல அசைந்தசைந்து தரையை நோக்கிச் சென்றது. என் இருதயத்தை அமுக்கிக் கொண்டிருந்த பெரிய பாரத்தையும் அந்த லேசான சீப்பு தன்னோடு தூக்கிச் சென்று விட்டது!

---



"நாங்கள் உத்தியோகத்துக்கு வந்து பத்து வருஷகாலமாக இதுவரை ஒரு நாள்கூட 'லேட்'டாகாமல் மணிக்கணக் குப்படி ஆபீஸுக்கு வந்தது பற்றி ரொம்ப சந்தோஷம். அதைப் பாராட்டு வதற்கு அறிகுறியாகத் தாங்கள் நாளைக்கு மட்டும் ஐந்து நிமிஷம் 'லேட்' டாக வரும்படி கேட்டுக் கொள்கிறேன்!"

மானிடப் பிறவியின் மகத்துவத்திற்குத் தொன்றுதொட்டு அனுகுணமாயிருந்த பராக்ரமத்தை, மறக்க முடியாத பண்டைகாலத்திய உபகதையின் மூலம் வர்ணிக்கும் சித்திரம்!

★

நியூ ஹன்ஸாரின்

# திரௌபதி

★



படம் பார்க்கும் ஒவ்வொரு ரஸிகனது உள்ளத்தையும் கவரும் திறமை வாய்ந்த

**சுசிலா ராணி**

★ சந்திரமோஹன் ★ டேவிட்
★ கே. என். சிங் ★ மஸார் கான்
★ ராம்கோபால்

முதலியோர் நடிப்பது

டைரக்ஷன்: பாபுராவ் படேல்

**மஹத்தான ஆரம்ப விழா!**
**6-7-45 முதல்**
**சென்னை ஸ்டாரில்**

பெங்களூர் ஸ்ரீ - பிரபாத் டாக்கீஸில் இப்போது 6-வது வாரமாகவும், 6-7-45 முதல் திருச்சி கெயிட்டியிலும் வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கிறது.

# காலக்ஷேபம்

### தைரியசாலி

முதல் போலீஸ்காரன்:— இப்பொழுது சைக்கிளில் 'லைட்' இல்லாமல் போனவரை நீ ஏன் பிடிக்காமல் விட்டு விட்டாய்?

இரண்டாவது போலீஸ்காரன்:— இது தெரியாதா, உனக்கு? நம்முடைய இன்ஸ்பெக்டர் ஐயாவைத் தவிர வேறு யாராவது நம் முன்பு இவ்வளவு தைரியமாய் 'லைட்' இல்லாமல் போவார்களா?

—எம். ஏ. நரசிம்மன்.

★

### ஞாபக மறதி!

எஜமான்:— உனக்கு ஞாபகமறதி அதிகமாக இருக்கின்றது. நீ நாளை முதல் வேலைக்கு வரவேண்டியதில்லை.

வேலைக்காரன்:— என்னைத் திடீரென்று வேலையை விட்டுப் போகச் சொன்னால் எப்படி? ஒரு மாத நோட்டீஸ் கொடுக்க வேண்டாமா?

எஜமான்:— போனமாதமே உனக்கு நோட்டீஸ் கொடுக்க வேண்டுமென்று இருந்தேன். மறந்தே போய் விட்டேன்.

—எஸ். நர்மதா.

★

### நர்ம சங்கடம்!

புதிய நண்பர் (நாடகம் பார்த்துக் கொண்டு):— இதில் கதாநாயகன் சர்வ மோசம் ஸார்!

கனவான்:— கதாநாயகன் வேஷம் போட்டுக் கொண்டவன் என் பிள்ளைதான்!

புதிய நண்பர்:— அப்படியா? ஒரு வேளை சரியாகக் 'கண்டக்ட்' செய்யாததுதான் நாடகம் கெட்டுப் போனதற்குக் காரணமாயிருக்கும்!

கனவான்:— இந்த நாடக 'கண்டக்டர்' என் மைத்துனன்தான் ஸார்.

புதிய நண்பர்:— சரிதான்; கதை இவ்வளவு உதவாக்கரையாக இருக்கிறபோது 'கண்டக்டர்' என்ன செய்ய முடியும்?

கனவான்:— ஓய்! கதை எழுதியவன் சாளுக்கும்! —ச. கு. சுப்பையா.

### இரண்டே தடவை!

ராமன்:— நான் மாமனார் வீட்டுக்கு வருஷத்தில் இரண்டே தடவைதான் போவது வழக்கம்.

சோமன்:— உனக்கு மாமனார் வீட்டாரிடம் அதிகப் பிரியமில்லைபோலிருக்கிறது.

ராமன்:— அப்படியல்ல! நான் ஒவ்வொரு தடவை போகும் போதும் ஆறு மாதம் அங்கேயே தங்கி விடுவேன்.

—எம். எஸ். வேங்கடரமண அய்யர்.

★

### காரணம்!

ராமு (பாலுவைப் பார்த்து):— அதோ இருக்கிறானே, அவன்தான் என் சைக்கிளைத் திருடியவன்.

பாலு:— ஏன் அவனைப் போலீஸில் ஒப்புவிக்கவில்லை?

ராமு:— ஏன் என்றால் அவன் இன்னும் அதற்குப் புது டயர் வாங்கிப் போடவில்லை!

—ரா. பாலசுப்ரமணியன்.

★

### புதிய செலவு

கணவன்:— 'தலைக்கு மேல் போன செலவு' என்று போட்டு மாணிக்கம் பிள்ளை கணக்கில் பதினைந்து ரூபாய் எழுது!



மனைவி:— அப்படியும் ஒரு செலவு உண்டா?

கணவன்:— ஒரு குடை வாங்கினேன். அதற்காகத்தான் அப்படி எழுதச் சொன்னேன்.

—கே. அச்சுதன்.




# காட்டில் நாடு

எம். எஸ். வி.

காட்டில் உள்ள மிருகங்களெல்லாம் ஒன்று கூடி, சிங்கராஜாவின் தலைமையில் ஒரு தீர்மானம் நிறைவேற்றின. மனிதர்களைப் போலவே வீடு வாசல் கட்டிக்கொண்டு நாகரிகமாய் வாழ வேண்டும். இனியும் கேவலம் மிருகங்களைப் போல் காட்டுமிராண்டித்தனமாய் இருக்கக்கூடாது என்பதுதான் அந்த தீர்மானம். எனவே சிங்கராஜாவின் ஆலோசனைப்படி மறுநாளே காட்டையெல்லாம் அழித்துப் பெரிய பெரிய வீடுகளும் அரண்மனைகளும், பாலங்களும் ரயில் ஸ்டேஷன்களும் கட்ட ஆரம்பித்தன. கட்டடங்கள் அனைத்தும் கட்டி முடிந்த பிறகு அந்தந்த மிருகங்களுக்குத் தக்கபடி வீடுகளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டன. சிங்கம் அரண்மனையில் குடி புகுந்தது. கரிகள் பங்களாவில் வாசம் செய்ய ஆரம்பித்தன. கழுதைகள் பாலத்தில் படுத்துப் புரண்டன.



உபாத்தியாயர் :—என்னடா, நீ வீட்டில் ரொம்ப விஷமம் செய்திருப்பாயே ? உங்க அப்பா சொன்னாரே ?

பையன் :—இல்லே சார் ! எங்க அப்பா பொய் சொல்லுவார்.

உபாத்தியாயர் :— என்னடா ! உங்க அப்பா பொய் சொல்லுவாரா ?

பையன் :—ஆமாம் சார்; என்னே இந்தப் பள்ளிக் கூடத்தில் சேர்க்கும் போது 'வாத்தியார் ரொம்ப நல்லவர்; அடிக்கவே மாட்டார்' என்று சொன்னார், சார் !

வீடுகள் கட்டி கிரகப் பிரவேசம் எல்லாம் முடிந்ததும் அடுத்தபடியாக மனிதர்களைப் போலவே அவற்றுக்குத் தாங்களும் ரயில் வண்டிகள், மோட்டார்கள் எல்லாம் தயார் செய்து சவாரி செய்யவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. பிறகு ஆகாச விமானங்களும் கப்பல்களும் தயார் செய்தன. கடைசியில் மனிதர்களைப் போலவே யுத்தம் செய்ய வேண்டுமென்றும் எண்ணம் தோன்றியது.

கரி சொல்லிற்று: "சீச்சீ, இது சுத்த மோசம். நான் காட்டிலிருந்து மனிதர்கள் வசிக்கும் நாட்டுக்குச் சென்று பார்த்திருக்கிறேன். அங்கே எல்லாரும் இப்போது நடக்கும் இந்த யுத்தத்தைப் பார்த்து 'கேவலம் மிருகங்களைப் போல் சண்டை போடுகிறார்களே, இந்த மனிதர்கள்!' என்று கூறுவதைக் கேட்டிருக்கிறேன்.

"நாம் யுத்தம் ஒன்றும் செய்யாமலிருக்கும் போதே இப்படிப்பட்ட பழிச் சொல்லுக்கு ஆளாகியிருக்கிறோம். நாளைக்கு யுத்தமே செய்ய ஆரம்பித்து விட்டால் மனிதர்கள் நம்மைப் பார்த்து இன்னும் அதிகமாய்ப் பழிக்க ஆரம்பித்து விடு

வார்கள். ஆகையால் நாம் யுத்தமே செய்யக் கூடாது" என்று எச்சரித்தது நரி.

"அதனால் என்ன? நாம் சண்டை செய்யும்போது 'தேவலை மனிதர்களைப் போல் சண்டை போடுகிறதுகளே. இந்த மிருகங்கள்!' என்று பதிலுக்குப் புழுகித்தக் கூறிவிட்டால போகிறது" என்றது மற்றொரு நரி.

எனவே, மிருகங்கள் யுத்தத்துக்காகக் குண்டுகள் தயார் செய்தன. தயார் செய்த குண்டுகளை ஆகாய விமானத்தில் ஏற்றிக்கொண்டு போய்க் குறி பார்த்துக் குண்டு போடப் பயிற்சி செய்ய ஆரம்பித்தன.

அதற்கு ஒரு பாலத்தை இலக்காக வைத்துக்கொண்டு அதைக் குறி பார்த்துக் குண்டு வீசிப் பயிற்சி செய்தன. அநேக மிருகங்கள் விமானத்தில் ஏறிப் பாலத்தின் மேல் ஐந்நூறு அடி உயரத்தில் சுற்றிச் சுற்றிப் பறந்து குண்டுகளை வீசின. குண்டு போட்டால் அது பாலத்தின் மீது விழுந்து பாலம் இடிந்து போகுமல்லவா? ஆனால் மிருகங்கள் போட்ட ஒரு குண்டாவது பாலத்தின் மீது விழுந்து பாலம் வெடிக்கவில்லை. எல்லா குண்டுகளும் குறி தவறி அக்கம் பக்கத்திலிருந்த அரண்மனைகள் மீதும் பங்களாக்கள் மீதும் ஸ்டேஷன்கள் மீதும் விழுந்து ஊர்க் கட்டிடங்கள் முக்கால்வாசிக்கு மேல் நாசமாயின. இன்னும் இரண்டு தினங்களுக்கு இதே மாதிரி பயிற்சி நடந்தால் கட்டி முடிந்த ஊர் பூராவும் நாசமாகி விடும் என்று அந்த ஊர் மிருகங்கள் இதற்கு என்ன செய்வது என்று யோசனை செய்தன.



பாலத்தைக் குண்டு போட்டு இடிக்கிற பயிற்சியினால் ஊரே அல்லவா டாமாகி விடுகிறது? ஆகையால் பாலத்தை நாமே கடப்பாறையைக் கொண்டுபோய் இடித்துத் தள்ளி விட்டால் அப்புறம் மேலே விமானத்தில பறந்து பயிற்சி செய்துவரும் மிருகங்களும் கீழே இறங்கி வந்து விடும். பிறகு ஒரு ஆபத்தும் ஏற்படாது என்று பாலத்தைப் போய் இடித்து விட்டு வந்தன.

ஆனால் இதற்குள் ஊர் பூராவும் நாசமாகி விட்டது. பாலமும் போய் விட்டது.

"மிருகங்கள் சண்டை செய்யக் கூடாதென்று நான் அப்போதே சொல்லவில்லையா?" என்று சொல்லிக் காட்டியது நரி.

"ஆமாம், நாம் பழையபடி காட்டில் மிருகங்களைப்போல் வசிப்பதே நலம்" என்றது மற்றொரு நரி.

அன்று முதல், மிருகங்கள் ஒன்றிரண்டு மிருந்திருந்த வீடுகளையும் இடித்துத் தள்ளிவிட்டுப் பழையபடி காட்டிலேயே வசிக்க ஆரம்பித்தன.



# 1959–61-ம் வருஷத்திய 3 சதவீதமுள்ள இரண்டாவது

# வெற்றிக்கடன்

## பற்றிய உண்மைகள்

(1957-ம் வருஷத்திய) 3 சத விகிதமுள்ள முதலாவது வெற்றிக்கடன், பதினொரு மாதம் முடிவதற்குள் 112 கோடி ரூபாய் கட்டிக்குப் போட்டு வைத்த பிறகு 1945-ம் வருஷம் பெப்ரவரி மாதத்தில் நிறுத்திவிடப் பட்டது.

அதே மாதிரி ஷரத்துகளின்பேரில் வெளியிடப்பட்டுள்ள (1959-61-ம் வருஷத்திய) 3 சதவீதமுள்ள இரண்டாவது வெற்றிக்கடன் பத்திரங்கள் மறு அறிக்கை பிறப்பிக்கப்படும் வரையில் இப்போது வாங்குவதற்குக் கிடைக்கக்கூடியவையாயிருக்கின்றன.

இக் கடன் பத்திரங்களை சர்க்கார் பாங்கர்கள் மூலமாகப் பெறலாம். எல்லாவற்றிற்கும் அவர்கள் ஏற்பாடு செய்வார்கள். அல்லது பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி, கான்பூர் ஆகிய இந்த இடங்களிலுள்ள இந்திய ரிஸர்வ் பாங்குக்காவது, வேறு இடங்களிலுள்ள இந்திய இம்பீரியல் பாங்க் கிளைகளுக்காவது, ஏதாவதொரு கவர்ன்மெண்ட் கஜானாவுக்காவது [illegible] விண்ணப்பம் செய்துகொள்ளலாம்.

வருஷமொன்றுக்கு 3 சதவீதப்படியுள்ள வட்டித்தொகையிலிருந்து வருமான வரி போக மீதித்தொகை வருஷத்தில் இரண்டு தடவை ஆகஸ்ட் 15-ம் தேதியன்றும் பெப்ரவரி 15-ம் தேதியன்றும் உமது விலாசத்துக்கு அனுப்பப்படும்.

இக் கடன் பத்திரங்களின் கீழ் கட்டிக்குப் போட்டு வைக்கக்கூடிய தொகைக்கு வரையறையே கிடையாது.

அசல் தொகை பத்திரமாயிருக்குமென்று உறுதி கூறப்படுகிறது. 1959-ம் வருஷம் ஆகஸ்ட் 15-ம் தேதிக்குப் பிறகும் 1961-ம் வருஷம் ஆகஸ்ட் 15-ம் தேதிக்கு முன்பும் பத்திரங்களில் கண்ட தொகைக்குக் கடன் மீட்டுக் கொள்ளப்படத் தக்கதாகும்.

இக் கடன் பத்திரங்கள் மார்க்கெட்டிலே சுலபமாய் விற்கப்படக் கூடியவையாயிருக்கிறபடியால், கீழ் கட்டிக்குப் போட்டு வைத்திருக்கும் தொகையை எந்தசமயத்திலேனும் பணமாகத் திரும்பப் பெறலாம். இப்போதே விண்ணப்பம் செய்துகொள்ளவும்!

இக் கடன் பத்திரங்கள் வைத்திருப்பவர்கள் வருமான வரிக்கு உள்ளானவர்களாயிராவிட்டாலும், இன்னும் குறைந்த விகிதப்படி வருமான வரிக்குள்ளானவர்களாயிருந்தாலும், அவர்கள் வருமான வரித்தொகையைத் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.

AAA 222

சேர்த்து வைத்துக் கடன் கொடுக்கவும்

## 1959–61-ம் வருஷத்திய 3 சதவீதமுள்ள இரண்டாவது

## வெற்றிக்கடன் பத்திரங்கள்

வாங்கவும்

இந்திய க[illegible] டிபார்ட்மெண்டாரால் வெளியிடப்பட்டது.

# வான சஞ்சாரம்

## இசைத் தேன்

சென்ற வார ரேடியோக் கச்சேரிகளில் ஜூலை 2உ இரவு திருச்சியில் கேட்ட சாத்தூர் ஏ. ஜி. சுப்ரமணியம் கச்சேரியை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். உதவுபடி மிகுந்த சாரீரத்தில் கற்பனை நிறைந்த சஞ்சாரங்களை ராகங்களில் கலைமயமாய் வழங்கினார். ஒவ்வொரு உருப்படிக்கு முன்னும் அதன் ராகத்தைப் பாடும் நல் வழக்கம் கொண்ட மிகச் சிலரில் ஒருவர். எனவே அன்று, ஆரபி, சாருகேசி, தர்பார், அடாணா ராகங்களையும் அவை தவிர ஒரு ராகமாலிகையையும் சரமாரியாய்ப் பொழிந்தார். சாருகேசியும், தர்பாரும் வேலைப்பாடுகளுடன் விரிவாய் அமைந்தன. 'இருபையா பாலயா'வில் ஸ்வரம் ஜோராயிருந்தது.

ஜூன் 30உ நடந்த டி. ஆர். மகாலிங்கத்தின் வேணுகானமே சென்னை நிலையத்தின் உயர்தரக் கச்சேரி. பால்ய வயதிலேயே மேதையாய் விளங்கி வந்திருப்பவர். குழலில் அரிய வேலைப்பாடுகளைக் காட்டும் திறம் படைத்தவர். எதையும் விரிவாகவோ, அவசரமாகவோ கையாளுவதில்லை. ஆனால் தொட்டதெல்லாம், வடுவில்லாத நற் சொருபங்களாய் விளங்கின. அன்று மணி ரங்கு, சாமா, பைரவி ராகங்களுக்குப் பின், கேதார கௌளையைப் பல்லவி ராகமாய் எடுத்து விளாசிவிட்டு பல்லவியில் ஒரு ராகமாலிகையையும் விளம்பினார். அவருடைய இப்போதைய வாசிப்பில் நீண்ட வளைவு குழைவுகளுக்குப் பதிலாக நுணுக்கமான கற்பனைச் சித்திரங்களே அதிகம் காணப்படுகின்றன. தவிர, பிடிகளுக்கும் சங்கதிகளுக்கும் நடுவே அதிக நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டு சும்மா இருந்து விடுவதின் பயனாக சஞ்சாரங்களின் தொடர்பழகு குறைவு படுகிறது. அன்று அவருக்குப் பக்க வாத்யமாய் அமைந்த கோவிந்தசாமி நாயக்கரின் வயலின் வாசிப்பு பாராட்டத்தக்கது.

28உ திருச்சியில் கேட்ட சிதம்பரம் ஜயராம பிள்ளை கனம் கொண்ட நடுத்தர சாரீரம் உடையவர். சாதகத்தினாலாய சரளமான உதவுபடி. எல்லாவற்றையும் தாராளமாய் அனுபவித்துப் பாடினார். அழகு பிடிகளுடன் காமவர்த்தினி, கரஹரப்ரியா, மாயாமாளவ கௌளை ராகங்களை விஸ்தாரமாயும், நாட்டை, பாகேஸ்வரி, நாதநாமக்ரியா இவைகளைச் சுருக்கமாயும் வழங்கினார். ராகபாவத்துடன் அர்த்தபாவமும் நன்கு விளங்கும்படியான சாஹித்யத் தெளிவு அவரிடம் குறிப்பிடத்தக்கது. கார்வைகளைக் கூட சுருக்கமாய்க் கொடுத்தார். 'ஆட்டத்திலும் அவர் தோற்றத்திலும்' என்ற இடத்தில் பாவம் பொழிவான சங்கதிகள் மனங்கவர்ந்தன.



ஸ்ரீமதி வேதவல்லி

27உ சென்னையில் பாடிய காளிதாஸ் என். நீலகண்டய்யருக்குக் கட்டை சாரீரம். அவர் சங்கீதத்தின் பெருமை ஞானபாவத்திலேயே முதல் பாகத்தை விட இரண்டாம் பாகம்தான் நன்கு ரஸிக்கக் கூடியதாயிருந்தது. சாரங்கா, தோடி ராகங்களும் அவைகளின் உருப்படிகளில் பாடிய ஸ்வரமும் கவனத்தை இழுத்தன. சாவேரியும், மத்ய மாவதியும் சுமாராயிருந்தன.

• • •

26உ ரேடியோவைத் திறந்ததும் சென்னை நிலையத்திலிருந்து இனிமையும், ஜீவனும் நிறைந்த குரல் ஒன்று காதில் விழுந்தது. பாடியவர் ராஜம் வைத்யநாதன். கற்பனைச் சிறப்பும், நாணக்கான வழியும் மனதைக் கவர்ந்தது. பிலஹரி, ஷண்முகப்ரியா ராகங்களை வெகு நேர்த்தியாய் வழங்கினார். தன்னிச்சயத்துடன் உருப்படிகளில் ஸ்வரம் பாடும் திறமை காணப்பட்டது.

அன்றிரவு அதே நிலையத்தில் பாடிய எம். நீலகண்டய்யரையும் குறிப்பிடவேண்டும். ஞானபாவம், நிதானம், நல்வழி இவை கொண்டு, பேகடா, நாட்டக்குறிஞ்சி, கல்யாணி ராகங்களை அளித்தார்.

27உ திருச்சியில் லால்குடி ஆர். நீலமேகம் பிள்ளை வயலின் கச்சேரியின் முதல் பாகத்தில் கேட்ட சாவேரியும், பேகடாவும், இரண்டாம் பாகத்தில் அடாணாவும் கல்யாணியும் நேர்த்தியாயிருந்தன.

28உ திருச்சியில் பாடிய வேதவல்லிக்கு இனிமையான குரல். உதவுபடிக்குக் குறைவில்லை. ஷண்முகப்ரியா விரிவாயும் அழகாயும் இருந்தது. மற்ற ராகங்களைச் சுருக்கமாய்ப் பாடியபோதிலும் வளப்பாயிருந்தன. முதல் பாகத்தில் கேட்ட ராகமாலிகை மேலாயிருந்தது. உருப்படிகளும் கச்சிதமாயிருந்தன.

29உ இரவு திருச்சியில் குழிக்கரை பிச்சையப்பா பிள்ளையின் நாகஸ்வரத்திலிருந்து கொண்டமல்லார், கோபிகா திலகம், சரஸ்வதி ராகங்கள் குளிர்ச்சியாய்க் காதை நிரப்பின.

30உ சென்னையில் வி. தேசிகாச்சாரியின் வேணுகானமும், எம். எஸ். நடராஜய்யரின் பாட்டும் ரஸிக்கக் கூடியதாயிருந்தன. முன்னவரின் ஷண்முகப்ரியாவும், சுத்த தேசியும் பின்னவரின் மோஹனமும் பேகடாவும் குறிப்பிடத் தக்கவை.

அன்று திருச்சியில் கும்பகோணம் டி. ஆர். கிருஷ்ணனின் வயலினும், வி. வி. ஆர். எம். கிருஷ்ணய்யரின் பாட்டும் கவனிக்கத் தக்கவை. முதல்வரின் வாத்யத்திலிருந்து சாரங்கா, மணி ரங்கு ராகங்கள் நல் வடிவங்களாய் வெளி வந்தன. அவைகளின் உருப்படிகளுக்கு வாசித்த ஸ்வரமும் விறுவிறுப்பாயிருந்தன. இரண்டாமவருக்கு நயமான குரல். ஒரு பிரபல வித்வானின் பாணியைப் பின் பற்றுகிறார் என்பது எளிதில் தெரிய வருகிறது. ஆனால் உருப்படிகள்தான் ரஸிக்கக்கூடியவை. ராகங்களைப் போதியவாறு கையாளவில்லை.

# சனி தசை முடிந்தது!

**பாரு**

"சாமி! சின்னம்மா கிட்டே இந்தக் கடுதாசை அம்மா கொடுக்கச் சொன்னாங்க" என்று சொல்லிக் கொண்டே சின்னான் தன் மடியிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து மணியினிடம் கொடுத்து விட்டுச் சென்றான். அதில்,

"என் பிரியமுள்ள ருக்மிணிக்கு! பெரியப்பா ரொம்பவும் கிடக்கிறார். நீ ஒரு தரம் அவரை வந்து பார்த்தால் தேவலை. இந்த சமயத்திலும் பழைய மனஸ்தாபத்தை மனதில் வைத்துக் கொண்டிருப்பது நன்றாயில்லை. மாப்பிள்ளை உத்தரவு கொடுக்க மாட்டாரென்று தோன்றினால் அவர் ஆபீஸிற்குப் போயிருக்கிற சமயத்திலாவது வந்து ஒரு நடை பார்த்து விட்டுப்போ.

உன் பிரியமுள்ள,
பெரியம்மா."

இந்தக் கடிதத்தைப் படித்ததும் மணி அதை சுக்கு நூறாய்க் கிழித்தெறிந்து விட்டான். அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. "இவள் மாத்திரம் போகட்டும். அப்புறம் இந்த வீட்டு வாசற்படி ஏறுவதைப் பார்க்கிறேன்" என்று கருவினான்.

மணிக்கு இவ்வளவு மனஸ்தாபம் தன் பெரிய மாமனார் பேரில் ஏற்பட்டதற்குக் காரணம் சில அல்ப விஷயங்கள் தான். மணி பழைய கர்நாடகக் கொள்கைகளை யுடையவன். முக்கியமாக அவனுக்கு மாப்பிள்ளை முறுக்கு, ஜபர்தஸ்து எல்லாம் ரொம்ப உண்டு. ராவ்சாஹிப் சுப்பய்யர் அவனை மாப்பிள்ளையென்று மதிக்காமல் தன் சொந்தப் பிள்ளைபோல் நடத்தினது அவனுக்குத் திருப்தியை உண்டு பண்ணவில்லை.

இன்றும் அவன் மாம்பலத்தில் சொந்தத்தில் வீடு வாங்க வேண்டுமென்று கடனாக ஆறாயிரம் ரூபாய் கேட்டதும் ராவ்சாஹிப் சுப்பய்யர் தன் கையில் பணமே யில்லை யென்று சொல்லி விட்டார். "கஞ்சன், பணம் கொடுத்தால் திருப்பி வராவிட்டால் என்ன செய்கிறது என்று பார்க்கிறான். இவ்வளவு கணக்குப் பார்க்கிறவன் வீட்டு வாசற்படியைக் கூட மிதிக்கக் கூடாது!" என்று தீர்மானித்து, அந்தத் தீர்மானத்தைச் சட்டமாக்கி அதைத் தன் சம்சாரம் ருக்மிணியிடமும் கூறி அதை மீறி நடந்தால் தன் பத்தினியா யிருக்க முடியாது என்று உத்தரவிட்டான்.

பாவம்! ருக்மிணி என்ன செய்வாள்? பதியே தெய்வம் என்ற மனப்பான்மை யுடையவளாதலால் மறு வார்த்தை பேசாமல் வாளாவிருந்து விட்டாள். ஆனால் அடிக்கடி அவள் மனம் தன்னையுமீறிப் பெரியப்பாவையும் பெரியம்மாவையும் நினைத்து உருகும். பத்தாவது மாதம் முதல் எடுத்து வளர்த்துக் கல்வி புகட்டி வாழ்க்கைத் துணைவனையும் தேடிக்கொடுத்து அதற்குப் பின்னும் காசாலும் பணத்தாலும் தனக்குச் செய்து கொண்டிருந்த அவர்களை நினைக்காமல் எப்படி இருக்க முடியும்? அதுவும் ராவ்சாஹிப்பிற்கு ருக்மிணி என்றால் உயிர். அவருக்குச் சொந்தக் குழந்தைகளில்லா விட்டாலும் ருக்மிணியைச் சொந்தக் குழந்தைக்கு மேலாகவே வைத்துத் தோளிலும் மார்பிலு மாகச் சாத்தித் தாமே தாலாட்டிப் பாலூட்டி வளர்த்தார்.

ராவ்சாஹிப் ரொம்ப இளகிய மனம் படைத்தவராயினும் பிரமாத முன் கோபக்காரர். கோபம் வந்து விட்டால் அதைக் காட்டுவது சாப்பாட்டின் மேல்தான். சாதம் வேண்டாமென்று தன்னறையில் போய் உட்கார்ந்து விடுவார். அந்தச் சமயத்தில் தைரியமாய் உள்ளே போய் அவரை இழுத்துக் கொண்டு வரக் கூடியவள் ருக்மிணி ஒருத்திதான்.

இவ்வளவு அருமையாய் வளர்த்தவர்களை உள்ளூரிலேயே இருந்து கொண்டும் பார்க்கக்கூடாது என்று கட்டளை பிறப்பித்தால் எப்படியிருக்கும்! பதியின் கோபத்திற்குள்ளாக மனமில்லாமல் பேசாமலிருந்து விட்டாள் ருக்மிணி.

"பார்த்தாயாடி! அவன் வந்தானா பார். அந்தப் பெண்ணிற்கும் சேர்ந்து வந்தவன் தான் சத்துருவாய் விட்டான். வளர்த்தகடா மார்பில் பாய்ந்தது என்பது சரியாய்த்தானிருக்கிறது. ஹூம்; எல்லாம் என்னுடைய போதாத வேளைதான். சனிதசையோ இல்லையோ. அதுதான் இப்படி வாட்டுகிறது" என்று தன் மனைவியிடம் வருத்தப் பட்டுக் கொண்டிருந்தார் ராவ் சாஹிப்.

அன்று மணி ருக்மிணியுடன் பக்கத்து வீட்டு பஞ்சநாதய்யர் வீட்டிற்கு வேண்டுமென்றே வந்து விட்டு இந்தப் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்காமல் போனது ராவ்

சாஹிப்பின் மனதை வாள்கொண்டு அறுப்பது போலிருந்தது. "பெற்ற வாண்டுகளுக்கு இவ்வளவு பிடிவாதம் இருக்கிற பொழுது எனக்கு மாத்திரம் இருக்காதா! இனிமேல் அதுகளா வந்து காலில் விழுந்தால் கூடத் திரும்பிப் பார்ப்பதில்லை" என்று சபதம் செய்து கொண்டார்.

ருக்மிணி ஸ்னானம் செய்யவில்லை என்ற சங்கதி ராவ்சாஹிப்பிற்கும் லக்ஷ்மியம்மாளுக்கும் ரொம்பவும் சந்தோஷத்தைக் கொடுத்தது. ‘எங்கே என்னைக் கொண்டுண்டு மலடியா யிருந்துவிடுவாளோன்னு பயந்தேன். எந்தச் சமயத்தில் குழந்தையை அழைத்து வைத்துக் கொண்டிருக்கணுமோ அந்த சமயத்திலா எல்லா மனஸ்தாபமும் வரணும்? எல்லாம் போதாத வேளை. எப்படியோ குழந்தை பெற்று சுகமாய் இருந்தால் சரி’ என்று வருத்தப்பட்டுக் கொண்டாள் லக்ஷ்மியம்மாள்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. காலையிலேயே காரை எடுத்துக் கொண்டு வெளியே போன ராவ்சாஹிப் சாப்பிடக்கூட வீட்டிற்கு வரவில்லை. ஒரு வாரமாகவே ராவ்சாஹிப் சாப்பிடும் நேரத்திற்கு வீட்டிலில்லாமல் அகாலத்தில் சாப்பிடுவது ஆச்சரியத்தை யளித்தது. அன்று அவருக்காகக் காத்துக் கொண்டிருந்துவிட்டுச் சலித்துப் போய் அப்பொழுதுதான் கண்ணயர்ந்திருந்தாள் லக்ஷ்மியம்மாள். திடுமென்று யாரோ வாசற் கதவைப் படபட வென்று அடிக்கவே அலறிப் புடைத்துக் கொண்டெழுந்து கதவைத் திறந்தாள். வாசலில் நின்ற ருக்மிணியின் சமையற்காரியைப் பார்த்ததும் லக்ஷ்மியம்மாளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. சமையற்காரி கூறியவை லக்ஷ்மியின் சப்த நாடியையுமே ஒடுக்க அடித்து விட்டது.

‘அம்மா, ருக்மிணியம்மாள் ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். பெண் பிறந்திருக்கு. ஆனால் அவளுக்குத்தான் ஸ்மரணையே திரும்பவில்லை. மாப்பிள்ளையும் வேலையாய் ராணிப்பேட்டை போயிருக்கிறார். குடித்தனக்காரன்தான் ஆஸ்பத்திரியில் ‘அட்மிட்’ பண்ணினார்கள். இப்பொழுது அவளுக்கு ஸ்மரணை வரணும்னு யாராவது இரத்தம் கொடுக்கணுமாம். இல்லாவிட்டால் பிழைக்கிறதே கஷ்டமாம். அவருக்கும் தந்தி போயிருக்கு. நீங்கள் உடனே கிளம்புங்கோ, மாமாவையும் கூப்பிடுங்கோ’ என்று சொல்லி முடித்தாள்.

ராவ்சாஹிப்பும் வீட்டிலில்லாமலிருந்தது லக்ஷ்மியம்மாவிற்கு என்னவெல்லாமோ செய்தது. ராவ்சாஹிப்பிற்கு வந்ததும் விஷயத்தை தெரிவிக்கச் சொல்லித் தோட்டக்காரனிடம் சொல்லி விட்டு டாக்ஸியொன்றை அமர்த்திக்கொண்டு ஆஸ்பத்திரியை யடைந்தாள். ‘அங்கு குழந்தையை என்ன கோலத்தில் பார்க்கப் போகிறேனோ?’ என்று பயந்துகொண்டே வார்டுக்குள் நுழைந்தாள். அங்கு அவள் கண்ட காட்சி அவள் கண்களிலிருந்து நீரை ஆறாய்ப் பெருகச் செய்தது. அது ஆனந்த பாஷ்பமா? அல்லது துக்க பாஷ்பமா? என்று சொல்ல முடியாது. ருக்மிணியின் பக்கத்தில் ராவ்சாஹிப் சுப்பய்யர் உட்கார்ந்து அவள் கூந்தலை வருடிக் கொண்டிருந்தார். அவருடைய முழங்கையில் பெரிய கட்டு காணப்பட்டது. ஒரு பக்கத்தில் ஒரு சிறு குழாய்மூலம் ருக்மிணியின் உடலுக்குள் இரத்தம் பாய்ந்து கொண்டிருந்தது. லக்ஷ்மியம்மாளுக்கு எல்லா விஷயமும் ஒரு நொடியில் விளங்கி விட்டது. ஒரு வாரமாய்த் தன் கணவன் வேளாவேளைக்குச் சாப்பிட வராததன் காரணமும் ருக்மிணிதான் என்று அறிந்ததும் அவளுக்கு ராவ்சாஹிப்பின் பிரேமையை நினைத்து மனம் துள்ளியது.

‘ஸார், சமயத்தில் மாத்திரம் அவருடைய இரத்தம் கிடைக்காமலிருந்திருந்தால் உங்கள் மனைவியை நீங்கள் பார்த்திருப்பீர்களா என்பது சந்தேகம்தான். நீங்கள் இருந்திருந்தால்கூட அம்மாளை ‘சேவ்’ பண்ணியிருக்க முடியாது. உங்களுடைய இரத்தமும் ‘பேஷன்டின்’ இரத்தமும் ஒத்துக்காது. ஆனால் நல்ல காலம்தான். இந்த ஆசாமியின் இரத்தமும் ‘பேஷன்டின்’ இரத்தமும் ஒத்துக்கொண்டது. உங்கள் மனைவிக்கு உயிர் கொடுத்த இவருக்கு என்ன கைம்மாறு செய்தாலும் போதாது’ என்று கூறிக்கொண்டே நர்ஸ் மணியுடன் உள்ளே நுழைந்தாள்.

அங்கு ராவ்சாஹிப்பைப் பார்த்ததும் அவன் மனம் உருகிவிட்டது. "மாமா! நான் பாவி, என்னை மன்னியுங்கள்" என்று பாய்ந்தோடி அவர் கால்களைப் பற்றிக் கொண்டு விம்மி விம்மி அழுது விட்டான்.

"யாரை யார் அப்பா மன்னிப்பது? எல்லாம் எனது போதாதவேளை. என்னுடைய சனிதசைதான் இப்படி ஆட்டிற்று. இன்றுடன் அது முடிந்து விட்டது" என்றார் ராவ்சாஹிப்.




# கம்பர் தரும் காட்சி



## 105. வேகமான நடை !

ராமனைப் பொதிகை மலைச் சாரலில் சௌகரியமாக இருக்கும்படி சொன்னார் அகத்திய முனிவர். சௌகரியமாக வசிப்பதல்ல என் காரியம். உயர்ந்த பண்பாட்டை யெல்லாம் ஒழித்துவரும் அரக்கர்களை ஒழிப்பதல்லவா என் கடமை என்று ராமன் சொன்னான்.

"வாஸ்தவந்தான். நீ சொல்லுகிறது ரொம்பவும் சரி" என்கிறார் முனிவர்.

'விழுமியது சொற்றனை நீ
வில்(இ)து இவன் மேல் நாள்
முழுமுதல்வன் வைத்துளது;
மூவுலகும் யாரும்
வழிபட இருப்ப(து); இது
தன்னை, வடி வாளிக்
குழுவு நிறை புட்டிலொடு
கோடி!' என நல்கி

[விழுமியது சொற்றனை நீ: ராமனே, நீ மிகவும் சிறந்த காரியத்தைச் சொல்லுகிறாய்; வில் இது இவன் மேல் நாள் முழு முதல்வன் வைத்துளது: இந்த வில்லை ஆதி காலத்தில் சிவபெருமான் இந்த இடத்தில் வைத்து விட்டுப் போனார்; மூவுலகும் யாரும் வழிபட இருப்பது: உலகத்தாரும் நானும், இந்த வில்லுக்குச் சகலவித வழிபாடும் செய்து வருகிறோம்; இது தன்னை: இந்த வில்லை; வடி வாளி குழுவு நிறை புட்டிலொடு: கூரிய அம்புக் கட்டுகளுடைய அம்பறாத் தூணியோடு; கோடியென நல்கி: சொந்தமாக என்று கொடுத்து.]

குறிப்பு:— வீரம் நிறைந்த காலத்தில் அதாவது வீரச் செயல்கள் அவசியமாய் இருந்த காலத்தில் அவைகளுக்கான கருவிகளை, (வில்லை, அம்பறாத் தூணியை) வழிபடுவது இயல்பு. இன்றைக்கும் அந்த வழிபாட்டை ஆயுத பூஜையில் காணலாம்.

பொதிகைமலைப் பக்கத்திலே ஆதி காலந் தொட்டே சமீப காலம்வரை இரும்புக் கனிகளும் கொல்லர் சேரிகளும் வளமாய் இருந்தன. அகத்திய முனிவர் அவை சம்பந்தமான கைத்தொழிலை வளர்த்து வந்தார் — 'குறுமுனிவன் கோத்தெடுத்த கொற்சேரி.'

உலகத்தில் எங்குமே இல்லாத தேர்ச்சியுள்ள ஆயுதங்களை அங்கே செய்து வந்தார்கள்; சிறிய அம்புகள் (வாளி) நீண்ட பெரிய அம்புகள் (கணை) பலவிதமான வாள், வேல் எல்லாம் செய்து வந்தார்கள். அவை யுத்தத்துக்கு வாய்ப்பான கருவிகளாக இருந்தன. ஆயுதம் சாதித்துள்ள வீரச் செயல்களைப் புகழ்ந்தும் பாராட்டியும் வந்தார்கள். ஆயுதங்களுக்கு வழிபாடும் உண்டு.

* * *

"உலகத்தை எதிராக வைத்தாலும் போதாது" என்கிறார் முனிவர் ஒரு வாளைக் குறித்து. 'திரிபுரத்தைச் சிவபெருமான் சிதைத்தது இந்தக் கணையைக் கொண்டுதான்' என்று வின்னியாசமாகப் பாராட்டிப் பேசுகிறார்.

இப்புவனம் முற்றும் ஒரு
தட்டின்இடை இட்டால்
ஒப்புவர(வு) இற்றென
உரைப்பரிய வாளும்
வெப்புருவு பெற்றஅரன்
மேருவரை வில்லால்
முப்புரமெரித்ததனி
மொய்க்கணையும் நல்கா.

[இப்புவனம் முற்றும் ஒரு தட்டின் இடை இட்டால்: இந்த உலகம் முழுவதையும் தராசின் எதிர்த் தட்டில் வைத்து எடை போட்டால்; ஒப்பு வரவு இற்றென: சமமாக வராது என்று சொல்லும்படியாக; உரைப்பரிய வாளும்: புகழ்தற்கு அரிய வாளும்; வெப்பு உருவு பெற்ற அரன்: அக்னி உருவக்

பெற்ற விடைபெருமான்; மேருவரை வில்லா முப்புரம் எரித்த: மேரு பர்வதத்தையே வில்லாகக் கையில் கொண்டு திரிபுரத்தைச் சுட்டெரிக்க உதவிய; தனி மொய்கணையும் தன்கா: ஒப்பற்ற உறுதி வாய்ந்த கணையையும் கொடுத்து.]

வாளையும் கணையையும் ராமனுக்குக் கொடுத்துவிட்டு அவனைப் பார்த்து முனிவர் சொல்லுகிறார்: "வீரனே, நான் சொல்வதைக் கேள். கோதாவரி நதி உற்பத்தியாகிற இடத்தை யொட்டி ஒரு வசதியான இடமிருக்கிறது. பெரிய பெரிய மரங்கள் வானத்தை அளாவி நிற்கின்றன. அதைவிட ஓங்கி நிற்கும் மூங்கில்கள். எல்லாவற்றிற்கும் மேலாக மலைச் சிகரங்கள் நிற்கின்றன. இதெல்லாம் ஒருபுறம் இருக்க நாலா பக்கமும் பூங்கொத்துக்கள் நிறைந்த சோலைகள் அடர்ந்து நிற்கும். நதியும் சின்னஞ்சிறு அலைகளை வீசி மெதுவாக நகரும். ஸ்நானத்துக்கு வெகு வசதி. இத்தகைய இடத்தை யொட்டித்தான் பஞ்சவடி என்ற ஆசிரமம்.

'ஓங்குமரன் ஓங்கி, கழை
ஓங்கி, மலை ஓங் கிப்
பூங்குலை ந றவுகுநீர்
சோலைபுடை விம் மித்,
தூங்குதிரை ஆறுதவழ்
தூயதொரு சூ ழல்,—
பாங்கர்உள தான்உறையுள்
பஞ்சவடி மஞ் ச

[கழை ஓங்கி: மூங்கிலானது வெகு நீளமாய் ஓங்கி; சோலை புடை விம்மி: நாலா பக்கமும் சோலைகள் அடர்ந்து நிற்கவும்; தூங்கு திரை: சின்னஞ் சிறு அலைகள் அசைந்து ஓடும்: தூயதொரு சூழல்: இப்படிப் புனிதமான பிரதேசம் ஒன்றுண்டு; பாங்கர் உளதான் உறையுள் பஞ்சவடி: அதன் பக்கத்தில் பஞ்சவடி ஆசிரமம் இருக்கிறது; மஞ்ச: மைந்தனே.]

குறிப்பு:—மரம், மூங்கில், மலை ஆகிய இவைகள், யாரும் வியக்கும்படி ஒன்றின் மேல் ஒன்றாய் நிற்கின்றன என்னும் அதிசய பாவத்தை,

ஓங்கு மரம்
ஓங்கி, கழை
ஓங்கி, மலை
ஓங் கி

என்னும் முதலடியின் ஓசையிலேயே காணலாம்.

'ஏகி, இனி(து) அவ்வயின்
இருந்துறைமின்' என் றான்;
மேகநிற வண்ணனும்
வணங்கிவிடை கொண்டான்;
பாகனைய சொல்லி யொடு—
தம்பிபரி விற்ப் பின்
போக, முனி சிந்தைதொட—
ரக், கடிது போனான்

[மேகநிற வண்ணனும்: ராமனும்; பாகு அனைய சொல்லியொடு கடிது போனான்: சீதையோடு வேகமாகவே நடந்து போனான். உத்சாகத்தோடே இருவரும் போனார்கள். ஆனால் பின்னால் போன தம்பிக்குக் கவலை. விடை கொடுத்து நின்ற முனிவரது சிந்தையும் அவர்களைப் பின் தொடர்ந்து போகிறது. அவருக்கும் கவலைதான்.]

குறிப்பு:—ராமனுக்குத் தன் லக்ஷியத்தில் குறி; சீதைக்கு வசிப்பதற்கு நல்ல இடம் வாய்த்தது என்பதில் திருப்தி: இந்தக் காரணத்தினாலே பஞ்சவடி நோக்கிச் செல்வது அந்த இருவருக்கும் நடையில் வேகம். ராமன் கடிது போனான் என்ற சொற்களுக்கிடையே தம்பியையும் முனிவரையும் வைத்துத் தயக்க பாவத்தைக் காட்டுகிறார் கவிஞர்.



தமிழ் நாட்டுக் கவிஞர் ராமலிங்கமும் கோன நாட்டுக் கவிஞர் வள்ளத்தோளும் சமீபத்தில் பொன்மலையில் நடந்த ரயில்வே தொழிலாளர்கள் மகாநாட்டில் சந்தித்தார்கள். அப்போது அருகில் இருந்தவர்களிடம் கவி வள்ளத்தோளைப் பற்றி நாமக்கல் கவிஞர் சொன்னதாவது:—

"என்னைவிட எல்லா வகையிலும் கவி வள்ளத்தோள் சிறந்தவர். எனக்கு ஒரு காதுதான் கேட்காது; அவருக்கோ இரண்டு காதும் கேட்காது!"





# அறுவடை யுத்தம்!

மேலே கண்ட படம் என்னவென்று ஏதேனும் புரிகிறதா?

இதென்ன கோரம்? கோடரியால் ஒருவனை வெட்டப் போகிறார்களே! அழகாகத் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லக் கூடாதா?

ஏழைச் சீன மக்கள் ஆயுதங்களுக்கு எங்கே போவார்கள்?

ஆம், இது சீன நாட்டு விஷயம். பொதுவுடைமைக் காரர்களால் விடுதலை செய்யப்பட்ட சுதந்தர வட மேற்கு சீனத்தில் நடக்கும் ஒரு சம்பவத்தையே இந்தப் படம் விளக்குகிறது.

ஏதாவது ஒரு சீன கிராமத்தில் அறுவடையாகி யிருக்கிறதென்றால், அந்த அறுவடைப் பொருள்களை யெல்லாம் கொண்டு போவதற்காக ஜப்பானியர்கள் ஆயுதபாணிகளாகப் போவார்கள். அவர்கள் உணவுப் பொருள்களை யெல்லாம் வண்டியில் ஏற்றும்வரை சீனர்கள் பார்த்துக்கொண்டே இருப்பார்கள். ஜப்பானியர்கள் வண்டியில் ஏறி உட்கார்ந்ததும், சீனர்கள் புற்றீசல்கள் போல, அரிவாள் கோடரி சகிதம் அவர்கள் மேல் பாய்வார்கள். சில சமயம் அவர்கள் கையையே ஆயுதமாக உபயோகித்து எதிரிகளைத் தாக்குவார்கள்.

சீனாவில் சீனப் படைகள் மாத்திரம் அல்ல, சாதாரண சீன மக்களும் ஜப்பானியரை எதிர்த்துத் தாக்குகிறார்கள் என்பதை இப்படம் நன்றாக விளக்குகிறது.

வடமேற்கு சீனத்துக்குப் போய்விட்டு வந்த ஓர் அமெரிக்க நிருபர் 'யேனானுக்கு விஜயம்'[1] என்ற பெயரில் தாம் கண்ணால் கண்டதை யெல்லாம் அழகாக எழுதியிருக்கிறார். அவர் கண்ணால் கண்டதை நாமும் கண்ணால் காணவேண்டும் என்பதற்காகப் படங்களையும் சேர்த்திருக்கிறார். இந்தப் படங்கள் வெறும் காகிதத்தில் எழுதியவை அல்ல. பார்ப்போர் மனதில் பசுமரத்தாணிபோலப் பதிய வேண்டும் என்பதற்காகச் சீனர்கள் இதைப் பலகையிலேயே எழுதி வைத்திருக்கிறார்கள்.

சீன நாட்டில் பொது உடைமைக் கட்சிக்காரர்கள் எப்பேர்ப்பட்ட அரிய பெரிய காரியங்களை யெல்லாம் சாதித்திருக்கிறார்கள் என்பதை இந்தப் புத்தகத்தில் சாங்கோபாங்கமாகக் காணலாம்.

---

1 Visit Yenan. ஆசிரியர்: [illegible]. பிரசுரம்: பீப்பிள்ஸ் பப்ளிஷிங் ஹவுஸ், பம்பாய். விலை: 1—8—0.

# வீட்டுக் கணக்கு

*நாடோடி*

“வீட்டுக் கணக்கு” என்ற தலைப்பைக் கண்டதும் பள்ளிக்கூடக் கணக்கு வாத்தியார்கள் எல்லாம் ஒன்றிரண்டு “அட! எங்களைப் பழிக்கலாச்சா!” என்று பிரம்பை எடுத்துக்கொண்டு என்னை அடிக்க வருவதுபோல் கண்ணுக்குத் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் பள்ளிக்கூட வாத்தியார்கள் கொடுக்கும் வீட்டுக் கணக்கைப் பற்றி நான் இங்கே எழுதவில்லை. அதனால் எப்பொழுதாவது சிரமப்பட்டிருந்தால் அல்லவோ எழுதுவதற்கு? வாத்தியார்கள் கொடுக்கும் வீட்டுக் கணக்கெல்லாம் பிள்ளையின் கெட்டிக்காரத்தனத்தைச் சோதிப்பதற்கு அல்ல, பிள்ளையின் தகப்பனாரின் புத்திசாலித்தனத்தைச் சோதிப்பதற்குத்தான் என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயமாச்சே!

நான் இப்பொழுது குறிப்பிடும் வீட்டுக் கணக்கு, எங்கள் வீட்டுக் கணக்கு. அதாவது எங்கள் மன்னி எங்கள் வீட்டுச் செலவையெல்லாம் குறித்து வைத்துக்கொள்ளும் கணக்கு.

தினசரி இரவு சாப்பாடானதும் மன்னியைச் சாப்பிட விட்டு விட்டு மீதி உள்ள நாங்கள் எல்லாரும், அதாவது அப்பா, நான், பாரு, அரட்டைக்கல்வி பாலு, அலங்காரப் பிடாரி லலிதா, அத்திப்பாட்டி ஆகிய எல்லோரும் வாசல் திண்ணையில் போடப்பட்டிருக்கும் நாற்காலிகளுக்கு வந்து விடுவோம், அரட்டையடிக்க.

தினம் இப்படி அரட்டை அடித்துக் கொண்டிருக்கையில், “மன்னி அவசரம், அவசரமாகச் சாப்பிட்டுவிடப் போகிறாளே! நின்று சாப்பிடவேண்டுமே” என்று நாங்கள் எல்லாரும் வேண்டிக் கொண்டே யிருப்போம்.

இதிலிருந்து மன்னியின் உடல் நிலையைப் பற்றி நாங்கள் எல்லாரும் எவ்வளவு கவலைப்படுகிறோம் என்று நினைத்து விடாதீர்கள். மன்னி சாப்பிட்டு முடிந்தால் எங்கள் அரட்டைக்குக் குந்தகம் வந்து விடுமே என்பதுதான் எங்கள் கவலை.

வீட்டுக்காக ஆகும் செலவையெல்லாம் தினம் ராத்திரி கணக்கு எழுதி வைக்கவேண்டும் என்று எங்கள் மன்னி ஒரு வழக்கம் வைத்திருக்கிறாள். இதனால் நாங்கள் எல்லாரும் படும் அவஸ்தை சொல்லி முடியாது.

நாங்கள் எல்லாரும் வெகு சுவாரஸ்யமாக அப்பாவின் அரட்டையைக் கேட்டுக்கொண்டிருக்கும் சமயத்தில், கூடத்திலிருந்து “பாரு! பாரு!” என்று மன்னி அலறுவது காதில் விழும். உடனே பாரு, முகத்தைச் சுளித்துக்கொண்டு உள்ளே செல்வாள். அன்று காலையில் பாருவிடம் கொடுத்த பணத்துக்கு என்ன செலவு என்று கேட்பதற்காகத்தான் அந்த அலறல். பாருவுக்கு அடுத்தபடியாக அரட்டைக் கல்வி பாலு கூப்பிடப்படுவான்.

பாலுவுக்குக் கணக்கு ஒப்பிப்பது என்றாலே ஒருவிதக் கசப்பு. “வாத்தியார் கொடுக்கும் வீட்டுக் கணக்குக்கு டிமிக்கி கொடுத்தாலும் கொடுக்கலாம், இதற்குக் கொடுக்க முடியாது போலிருக்கே!” என்று அலுத்துக் கொண்டே உள்ளே போவான்.

வீட்டுக் கணக்கைக் கண்டு பாலு பயப்படுவதற்கு இன்னொரு காரணமும் உண்டு. தினம் மார்க்கெட்டிலிருந்து காய் கறிகள் வாங்கிக்கொண்டு வருவது அவன்தான். காய் கறிகளுக்காக அவன் கொடுத்த விலை மலிவா, கிராக்கியா என்னும் விஷயம் ராத்திரி வீட்டுக் கணக்கு எழுதப்படும் சமயத்தில்தான் தர்க்கிக்கப்படும்.

அதிலும் இந்தக் கறி காய் விஷயத்தில், ஸ்திரீகளின் ஆசை சொல்லி முடியாது. கறி காய்கள் எவ்வளவு மலிவாக வாங்கிக் கொண்டு வந்தாலும் சரி, அதைவிட மலிவாக வாங்கியிருக்கக் கூடாதா என்றுதான் அவர்களுக்கு ஆசை!

ஆகவே தான் வாங்கிக்கொண்டு வந்த ஒவ்வொரு கறிகாயின் விலையையும்

பாலு ஒப்பிக்கும்போது, "அட தடியா! எதற்காக அத்தனை விலை கொடுத்து வாங்கினாய்? அதற்குத்தான் உன்னை மார்க்கெட்டுக்கு அனுப்பக் கூடாது என்பது" என்று மன்னி சொல்வாள். அதோடு பாலு, பாவம் கறிகாயின் நிஜ விலையோடு, அவன் ஹோட்டலில் செலவழித்த பணத்தையும் சேர்த்துச் சொல்லவேண்டியிருக்கிறது. மார்க்கெட்டுக்குப் பக்கத்தில் ஹோட்டலைக் கட்டி வைத்துத் தொலைத்திருக்கும் பொழுது, அதற்குள் நுழையாமல் இருக்க முடிகிறதா, என்ன?

"நான்தான் மக்கு, கறிகாய் வாங்கத் தெரியவில்லை என்கிறாயே? பின் எதற்காகத் தினம் என்னையே அனுப்புகிறாயாம்! என் அண்ணாவை (வேறு யாரும் இல்லை. சாக்ஷாத் நான் தான்.) ஒரு நாளாவது அனுப்புகிறது தானே?" என்பான் பாலு.

இதற்கு மேலும் அங்கு இருந்தால் நம் தலை உருளும் என்று எனக்குத் தெரியும். ஆகவே திண்ணையில் மிகவும் இறுக்கமாக இருக்கிறாப் போலவும், கொஞ்ச நாழியாவது வாசலுக்குப் போகா விட்டால், மூச்சுத் திணறி விடும் போலவும் வாசலுக்குக் கம்பி நீட்டி விடுவேன்.

அதற்கு மேலும் நிலைமையை நீடிக்க விட்டால் பாலு அழ ஆரம்பித்து விடுவான் என்று அப்பா அவன் பக்கம் பரிந்து பேசுவதற்காக உள்ளே செல்வார். "எதற்காகடி அம்மா இப்படிப் பிள்ளையைக் கோவித்துக் கொள்கிறாய்? ஒரு அரையணா, ஓரணா அதிகமாய்ப் போனால்தான் என்ன கெட்டுப் போச்சு?" என்று கேட்பார்.

"ஆமாம்; நீங்கள்தான் கணக்குச் சரியாகக் கொடுப்பதில்லை, பிள்ளையையும் கொடுக்க வேண்டாம் என்று சொல்லி விடுங்கோ."

"கணக்குக் கொடுக்கா விட்டால் என்ன? பாலுவுக்கு இத்தனை ரூபாய் கொடுத்தேன், பாருவுக்கு இத்தனை ரூபாய் கொடுத்தேன் என்று எழுதி வையேன்."

"ஆமாம், உங்கள் கணக்குத்தான் இப்படித் தினம் எழுதுகிறேன், பிள்ளையின் கணக்கையும், பெண்ணின் கணக்கையும் இப்படியே எழுதினால் நான் கணக்கு எழுதி உருப்பட்டாற் போலத் தான்" என்று மன்னி அலுத்துக் கொள்வாள்.

தினம் தன் வீட்டிலிருந்து வாங்கிக் கொள்ளும் பணத்துக்கு அப்பா கணக்குச் சொல்லுகிறது இல்லையே என்று மன்னிக்குக் கோபம்!

ஆனால் அப்பாவைக் குற்றம் சொல்லி என்ன பிரயோஜனம்? கொடுக்கிறாப்போல் கொடுத்துப் பின்னால் தெரியாமல் எடுத்துக் கொண்டால் யாரால் தான் கணக்கு ஒப்பிக்க முடியும்! அப்பா தான் வாங்கிக் கொள்ளும் பணத்தைக் கன்னாபின்னாவென்று செலவழிக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டுமே என்பதற்காக, நினைத்த செலவுக்கெல்லாம் மன்னி அவரைக் கேட்காமலேயே அவர் சட்டைப் பையிலிருந்து சில்லறை, சில்லறையாக எடுக்க ஆரம்பித்துவிடுவாள்.

வாசலில் மாம்பழம் வந்திருக்கா, சரி, அப்பா சட்டைப் பையிலிருந்து இரண்டு ரூபாய் எடு, கோவில் கும்பாபிஷேகத்துக்குக் காணிக்கை கேட்கிறார்களா, சரி, அப்பா பையிலிருந்து பத்து ரூபாய் எடு, என்று இந்த மாதிரி அப்பாவுக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டே போனால் அவர் எப்படிக் கணக்கு ஒப்பிக்க முடியும்?

இருந்தாலும் அப்பா சரியாகக் கணக்கு ஒப்பிக்க மாட்டேன் என்கிறாரே என்று மன்னிக்கு உள்ள வருத்தம் சொல்லி முடியாது.

"இதோ பாருங்கள். நான் உங்களைப்போல் கணக்கு இல்லாமல் செலவழிக்கிறேனா, என்ன? நான் வாங்கின சாமான் எல்லாவற்றுக்கும் இதோ கணக்கு இருக்கிறது பாருங்கள்" என்று மன்னி கணக்கெடுத்துக் காண்பிப்பாள்.

கணக்கு இல்லாமல் பத்து ரூபாய் செலவழிப்பதை விட, கணக்கோடு ஆயிரம் ரூபாய் செலவழித்தாலும் தப்பு இல்லை என்பது மன்னியின் எண்ணம். ஆகவே மன்னி தனக்காகவோ, அல்லது பாருவுக்காகவோ எத்தனை விலையில் எத்தனை புடவைகள் வாங்கினாலும் சரி, அதைப் பற்றிக் கவலைப்பட மாட்டாள். இந்தப் புடவைச் செலவு வீட்டுக் கணக்குப் புத்தகத்தில் எழுதப்படா விட்டால்தான் அவளுக்குக் கவலை......

அடடே! அதோ நம்மைக் கணக்கு ஒப்பிக்க கூப்பிடுகிறாளா மன்னி! இனி மேலும், இங்கே இருந்தால் ஆபத்துத் தான். சற்று அடுத்த தெரு வரையில் நடந்து விட்டு வந்தால்தான் பிழைக்கலாம். ஏனெனில் மன்னி அதற்குள் கணக்கு நோட்டை மூடி வைத்து விட்டுத் தூங்கப் போய் விடுவாள்!

# உன் பிரஷில் ரத்தம் கண்டால்

## ஆபத்திற்கு அறிகுறி....

...பல் ஈறுகள் கெட்டுப்போகும் என்பதற்கு அதுதான் எச்சரிக்கை! கொடிய ஈறு உபாதைகளாகிய பயோரியா அல்லது ஜின்ஜிவிடிஸ் உங்கள் பற்களை நாசமாக்கி தேகாரோக்கியத்தையும் பாழாக்கலாம். இந்த அபாயத்தைப் போக்க கிப்ஸ் "எஸ். ஆர்." டூத் பேஸ்ட் உபயோகியுங்கள்—அது ஈறு வியாதியைத் தடுக்கவும் கட்டுப்படுத்தவும் வல்லது. அதிலுள்ள ஸோடியம் ரெஸினோலியேட் ஈறு உபாதைகளைக் குணப்படுத்த பல் வைத்தியர்கள் உபயோகிக்கிறார்கள். வழக்கமாக கிப்ஸ் "எஸ். ஆர்." உபயோகித்தால் அது உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாகவும் பற்களை உறுதியாகவும் வைத்திருக்கும்.

Gibbs

# "S.R." TOOTHPASTE



GSR. 18-33 TM

D & W. GIBBS LTD., LONDON, ENGLAND

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.